# கொங்கு நாட்டு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு





தே. ஞானசேகரன்

# கொங்குநாட்டு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு

தே. ஞானசேகரன்

அறிவகம்
சி1 ஆசிரியர் குடியிருப்பு
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர் 641 046

# நூல் விபரம


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | கொங்கு நாட்டு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு |
| ஆசிரியர் | : | தே. ஞானசேகரன் |
| வெளியீடு | : | அறிவகம்<br>சி1 ஆசிரியர் குடியிருப்பு<br>பாரதியார் பல்கலைக்கழகம்<br>கோயம்புத்தூர் 641 046. |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| பொருள் | : | நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு மரபுகள் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பாண்டு | : | பிப்ரவரி 2002 |
| நூல் அளவு; படிகள் | : | 1/8 ; 1000 படிகள் |
| அச்சு அளவு | : | 11 புள்ளி |
| பக்கங்கள் | : | 101 + iv |
| விலை | : | ரு.40.00 |
| கணிப்பொறி வடிவம் | : | கொ.செ.ஐயப்பன்<br>உமா டிடிபி சென்டர், கல்வீரம்பாளையம்<br>கோவை 46 (தொலைபேசி 426666) |
| அச்சகம் | : | மணி ஆப்செட்<br>112 பெல்ஸ் ரோடு<br>சென்னை 600 005<br>(தொலைபேசி :8555249; 8588186) |

**THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALAI TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS.**

# நன்றியுரை

கோவை பாரதியார் பல்கலைக்கழகத்தில் 1999ம் கல்வியாண்டில் யு.ஜி.சி தனி ஒதுக்கீடு சிற்றாய்வுத் திட்டத்தின்கீழ் நான் மேற்கொண்ட ஆய்வேட்டின் அறிக்கையே உங்கள் கைகளில் தவழ்கின்ற **கொங்கு நாட்டு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு** (Practice of the Folk Worship in Kongu Region) என்னும் தலைப்பிலான இந்நூலாகும் இந்த நூலில் நான் தமிழகத்தில் கொங் நாட்டிற்கென இருக்கும் பழஞ்சமயச் சிறப்பை (Primitive Religion) நாட்டுப்புறத் தெய்வ வழிபாடுகளிலிருந்து கண்டறிந்து சொல்ல முயன்றிருக்கின்றேன்.

இந்த ஆய்வை எனது துறைப் பணியூடே செய்ய அனுமதியளித்த பாரதியார் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மற்றும் பதிவாளர் ஆகியோருக்கு என் நன்றிகள் இந்த ஆய்வை நான் சிறப்பாகச் செய்ய பல நிலைகளில் எனக்கு உதவிய பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் தலைவர் டாக்டர் **இரா. சந்திரசேகரன்** அவர்களுக்கு என் இதயம் நிறைந்த நன்றிகள்.

என்னை மாணவப் பருவத்திலிருந்து பலநிலைகளில் வளர்த்துவிட்டு பல நிலைகளில் என் வளர்ச்சிக்குத் துணைநிற்கும் மதுரை காமராசர் பலகலைக் கழகத்தின் இக்கால இலக்கியத் துறையின் தலைவர் டாக்டர் **க. வேங்கடராமன்** அவர்களை நான் இங்கே நன்றியோடு நினைவுகூர்வதில் பெருமகிழ்வடைகின்றேன். திருப்பதி தேவஸ்தான நிதியில் இந்நூல் வெளிவர எனக்கு வழிகாட்டியாக அமைந்து, விண்ணப்பம் வழங்கி உதவிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையின் முன்னாள் தலைவர் டாக்டர் **சொக்கலிங்கம்** அவர்களுக்கு நன்றி

என் இலக்கியப் பணியில் எப்பொழுதும் தோளோடு தோள் நின்று உதவி வரு என் இனிய சகோதரர்கள் **மா.கிருஷ்ணசாமி, IRS** (இணை ஆணையர், வருமானவரித்துறை, சென்னை) மற்றும் **க. பழனிச்சாமி,** எம்.ஏ. (உதவி ஆணையர், வணிகவரித்துறை, சேலம்) ஆகியோர்க்கு என் நன்றிகள் என்றும் உரியது.

இந்த நூலினை வெளியிட நிதியுதவி அளித்து உதவியுள்ள திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரிக்கு என் நன்றிகள். இந்நூலை அழகிய முறையில் கணினி அச்சாக்கமும் வடிவமைப்பும் செய்து உதவிய என் இனிய நண்பர் **கொ. செ. ஐயப்பன்** அவர்களுக்கும், திரு. **பாஸ்கர பாண்டியன்**, மணி ஆப்செட், சென்னை அவர்களுக்கும் என் உள்ளம்கலந்த நன்றிகள்

**தே. ஞானசேகரன்**

# பொருளடக்கம்

# முன்னுரை

நம் செந்தமிழ்நாடு சேர, சோழ, பாண்டிய நாடுகளைப் போலவே தொண்டைநாடு, கொங்குநாடு என்ற இரண்டு தனிப்பிரிவு நாடுகளையும் பழங்காலத்தில் தன்னகத்தே கொண்டிருந்தது. கொங்கு நாடு தனக்கென்று எப்பொழுதும் தனியான எல்லைகள், வரலாறு, கலை, பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கம் ஆகியவைகளைக் கொண்டது. இதனைப் பழங்கால இலக்கியங்களும், கல்வெட்டுக்களும் உறுதிப்படுத்துகின்றன. நீலகிரி, கோவை, ஈரோடு, சேலம், தருமபுரி மாவட்டங்களின் பகுதியும், கரூர் மாவட்டக் கரூர் குளித்தலைப் பகுதிகளுமே பழங்கொங்கு நாடாகும். இவ்வகையில் அமைந்த இக்கொங்கு நாட்டுப் பகுதியில் மக்கள் சமயமாக விளங்கும் நாட்டுப் புறத் தெய்வ வழிபாட்டு மரபுகள் பலதனித்த மரபுகளைக் கொண்டு விளங்குகின்றன. இவ்வாய்வு கொங்கு நாட்டில் வழக்கிலுள்ள நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு மரபுகளைக் கண்டறிந்து சொல்ல முயல்கின்றது.

### ஆய்வுப் பொருள்

"**கொங்கு நாட்டு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு**" என்பது இவ்வாய்வின் ஆய்வுப் பொருளாகும்.

### ஆய்வு நோக்கம்

இவ்வாய்வு பின்வரும் ஆய்வு நோக்கங்களைக் கொண்டு விளங்குகின்றது.

1. நாட்டுப்புறச் சமயம் (Folk Religion) என்பதற்கான வரையறை செய்ய முயல்வது.

2. நாட்டுப்புறச் சமயத்தின் வகைகளைக் கண்டறிய முயல்வது.

3. தெய்வங்களின் தோற்றம் பற்றிய கதைகளாகக் கருதப்படும் புராணக்கதைகள் (Myth) பழமரபுக்கதைகள் (Legend) ஆகியவற்றின் மூலம் தெய்வங்களின் தோற்ற வரலாற்றைக் கண்டறிவது.

4. நாட்டுப்புறச் சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் உள்ள பண்பாட்டுத் தொடர்பினைக் கண்டறிவது.

5. நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டில் இடம் பெறும் வழிபாட்டு மரபுகளை விளக்குவது

6. கொங்குநாட்டில் மிகச் சிறப்புப் பெற்றுக் காணப்படும் வேளாண் வள வழிபாட்டினை தொகுத்து ஆய்வு செய்தல்.

## களப்பகுதியும் சேகரிப்பும்

கொங்கு நாட்டில் கோவை மாவட்டம், ஈரோடு மாவட்டம், பழனி வட்டாரம் ஆகியன இவ்வாய்வுக்குரிய களமாகும். இக்களப்பகுதிகளுக்கு உட்பட்ட கிராமங்களில் நடைபெற்ற கோயில் திருவிழாக்களில் நேரடியாகப் பங்கேற்று உற்று நோக்கல் முறையின் மூலம் சேகரிக்கப்பட்ட தகவல்களும் தகவலாளர்களிடம் பேட்டி வாயிலாகச் சேகரிக்கப்பட்ட தகவல்களும் இவ்ஆய்வின் முதன்மை ஆதாரம் ஆகும். இவ்வகையில் தெய்வங்களின் தோற்றக் கதைகள், பாடல்கள், வழிபாட்டு முறைகள் ஆகிய ஒலி நாடாக்கருவியின் மூலம் தொகுக்கப்பட்டு எழுத்து வழி இவ்ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு ஆதாரங்கள்

களப்பகுதியில் சேகரிக்கப்பட்ட நாட்டுப்புற வழக்காறுகளும் வழிபாட்டு முறைகளும் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்கள் ஆகும். இவ்வாய்வுப் பொருள் குறித்த ஆய்வு நூல்கள், ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள் ஆகியன துணைச் சான்றுகளாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

ஆய்வின் நிறைவிற்கும் சிறப்பிற்கும் வெற்றிக்கும் முதற்காரணமாக அமைவது அதனை மேற்கொள்ளப் பயன்படுத்தும் ஆய்வு அணுகுமுறையாகும் (Research Methodology).

இதனடிப்படையில் இவ்ஆய்வில் விளக்கமுறை ஆய்வு (Descriptive Method) பகுப்பாய்வு முறை (Analytical Method), சமூகவியல் அணுகுமுறை (Socialogical Approach), மானுடவியல் அணுகுமுறை (Anthropological Approach), ஆகியன பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாக அமைந்துள்ளது. அவை வருமாறு

1. நாட்டுப்புறச் சமயம் தோற்றமும் வளர்ச்சியும்
2. நாட்டுப்புறத் தெய்வ வகைகள்
3. வழிபாட்டு முறைகள்
4. வேளாண் வளவழிபாடு

## பின்னிணைப்பு

இப்பின்னிணைப்பில் ஆய்வுக்குப் பயன்படுத்தப்பட்ட நூல்களின் விபரமும், தகவலாளர் பட்டியலும் நிழற்படங்களும் இடம்பெற்றுள்ளன.

OOO

# 1. நாட்டுப்புறச் சமயம் தோற்றமும் வளர்ச்சியும்

கொங்கு நாடு சங்ககாலந்தொட்டுத் தனி அரசியல் பூகோளப் பிரிவாகச் செயல்பட்டுவந்த நாடு. இலக்கியச் சான்றுகளும், கல்வெட்டுச் சான்றுகளும் இப்பகுதியின் தனிச்சிறப்புமிக்க வரலாற்றினையும் சமூக அமைப்பினையும் வலியுறுத்தி நிற்கின்றன. இம்மண்ணின் சமய வாழ்க்கை பழங்குடித்தன்மை மிகுந்தது ஆகும். பண்டைக் காலத்தில் இயற்கையோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டு ஆதிகுடி மக்கள் வாழ்ந்தனர். இவர்களின் சமயம் புராதனச் சமயம் (Primitive Religion) அல்லது பழஞ்சமயம் என்று பெயர்பெறும். இப்பழஞ் சமயத்தின் கூறுகளைத் தன்னுள் கொண்டு விளங்குவதே இன்றைய கொங்கு நாட்டு நாட்டுப்புறச் சமயமாகும். இவ்வியல் சமயம் என்றால் என்ன? நாட்டுப்புறச் சமயம் குறித்த பொருள் விளக்கம் என்பதாக நாட்டுப்புறச் சமயத்திற்கும் சமயத்திற்கும் பொதுவான வரைவிலக்கணம் கூறமுற்படுகின்றது. மேலும் பழஞ்சமயத்தின் தோற்றம் குறித்த பல்வேறு வழிபாட்டு முறைகளைச் சுருக்கமாக அறிமுகம் செய்து நாட்டுப்புறச் சமயத்தில் காணப்பெறும் பழஞ்சமயக் கூறுகளைக் கண்டறிந்து சொல்ல முயல்கின்றது.

### சமயம் - பொருள் விளக்கம்

தெய்வ நம்பிக்கைகளும், சடங்குகளும் சமயம் என்னும் பொருளில் சுட்டப்படுகிறது. "தெய்வம் தொடர்பானவற்றில் நம்பிக்கை கொண்டு சடங்குகளை மேற்கொள்வது 'சமயம்' என்கின்றார் பொகெட்டு எனும் மானுடவியலறிஞர்.[1] "ஒரு குறிப்பிட்ட சமூகத்திலுள்ள அனைவரின் ஒன்றுபட்ட மனத்தின் வெளிப்பாடு அச்சமூகத்தவரின் ஒன்றுபட்ட மனத்தின் வெளிப்பாடு அச்சமூகத்தவரின் சமயம்" என்கின்றார் தர்கைம்[2] எனும் அறிஞர். "சமயம் ஓர் உளத்திறன், ஓர் மனச்சார்பு, புலன் உணர்வுக்கும், அறிவாய்வுத் திறனுக்கும் அப்பாற்பட்டது. பல்வேறு பெயர்களுடனும் தோற்றங்களுடனும் எல்லையற்ற பரம்பொருளை

மனிதன் அறிந்து கொள்ள உதவுவது" என்பார் சமய அறிஞர் மாக்ஸ்முல்லர்[3]. "தெய்வத் தன்மை வாய்ந்தது ஒன்று உண்டு என்று கருதி அதனுடன் தொடர்பு கொண்டு தனித்தனியாக மனிதன் அடையும் அனுபவமும், உணர்ச்சியும் நடத்தும் செயலுமே சமயமாகும்" என்பார் வில்லியம்ஸ் ஜேம்ஸ்[4] இவ்வாறு சமயம் என்பதற்கான விளக்கத்தைக் கூற முயலும் அறிஞர்கள் பலரும் பல்வேறு விதமான கருத்துக்களைக் கூறுகின்றனர். ஆனால் பின்வரும் ஜார்ஜ் தாம்சனின் சமயம் குறித்த விளக்கம் வளர்ச்சியடைந்த சமயத்திற்கும் (Elite Religion) நாட்டுப்புறச்சமயம் (Folk Religion) ஆகிய இரண்டுக்கும் பொருந்துவதாக அமைவதைக் காணலாம். அவை வருமாறு

"இவ்வுலகம் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியின் கட்டுப்பாட்டில் இயங்குகிறது என்றும், அந்தச் சக்தியை வழிபாட்டின் மூலமாகவும் பலி கொடுப்பதன் மூலமாகவும் திருப்திபடுத்தி நமக்கு உதவி புரியச் செய்யலாம் என்றும், அந்தச் சக்தியை ஞானத்தால் அல்லாமல் பக்தியால் மட்டுமே அறிய முடியும் என்றும்; அனுமானம் (கற்பிதம்) செய்து கொண்டு அதன் அடிப்படையில் உருவாகும் நம்பிக்கைகளும், நடைமுறைகளும் அடங்கிய ஓர் அமைப்பைச் சமயம் என்று வரையறுக்கலாம்"[5] என்பார். இக்கருத்துக்களிலிருந்து இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலிடம், வழிபாட்டின் மூலமும், வேண்டுதல்கள் மூலமும் மனிதன் தொடர்பு கொள்ள முயல்வதைச் சமயம் என்று வரையறை செய்யலாம்.

## இந்து சமயமும் நாட்டுப்புறச் சமயமும்

தமிழ் நாட்டில் வாழும் கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர்கள் நீங்கலாக ஏனையோர் இந்து சமயத்தவராகக் கருதப்படுவது ஒரு பொதுவான மரபாக உள்ளது. ஆனால் உண்மையில் இந்து சமயமென்ற சொல்லுக்குள் பெரும்பாலான தமிழர்களை அடக்குவது ஒரு வசதியின் பொருட்டே அன்றி உண்மையின் அடிப்படையில் அல்ல. தமிழ் நாட்டின் சமய வரலாற்றில் வேத சமயம், சைவ சமயம், வைணவ சமயம் என்ற மூன்று முக்கியச் சமய நெறிகள் வழக்கில் இருந்தமை மறுக்க முடியாத வரலாற்றுண்மையாகும். காலப்போக்கில் சில அரசியல், பொருளாதார சூழல்களுக்கேற்ப இச்சமயங்களை இணைத்து,

இவையனைத்தும் ஒரே சமயம் என்ற புறத்தோற்றத்தை உருவாக்க முயன்றதன் வெளிப்பாடே இந்து சமயமாகும்" என்பார் ஆ. சிவ சுப்பிரமணியன்[6]. இன்று இந்தியத் துணைக் கண்டத்தில் இந்துக்கள், இந்து சமூகத்தினர் என்றழைக்கப்படும் மக்கள் ஆங்கிலேயரின் வருகைக்குமுன் அவ்வாறு தம்மை அழைத்துக் கொள்ளவில்லை. அவர்கள் பல்வேறு அடையாளங்களுடன் பல்வேறு சமூகங்களாக (Communities) வாழ்ந்தனர் அவர்கள் வாழ்ந்த இடங்கள், பேசிய மொழிகள், அவர்களது சாதிகள், தொழில்கள், சமய நெறிகள் அவர்கள் சார்ந்திருந்த சமயக் குழுக்கள் (Sects) முதலியவைதான் அவர்களது அடையாளங்களை வரையறுத்தனவேயன்றி அவர்கள் அனைவரையும் ஒரே திணைக்குள் கொண்டு வருகிற 'இந்துக்கள்' என்ற சொல் அல்ல. பார்ப்பனிய தர்ம சாத்திரத்திலும் கூட இந்து சமூகம் என்பது ஏதும் குறிக்கப்படவில்லை என்பார் தே. லூர்து[7]. இதிலிருந்து இந்தியாவில் ஆங்கிலேயரின் வருகைக்கு முன்பு இந்து சமயம் என்ற ஒரு மரபு இல்லை என்பதை அறிகின்றோம். இதற்குமாறாக மக்கள் பல்வேறு நிலைகளில் வழிபட்ட தெய்வங்களைக் காண்கின்றோம். இத்தெய்வங்கள் அவர்களது வாழிடம், சாதி, தொழில்கள் சார்ந்தே அமைந்தன. பழந்தமிழரின் திணை நிலைத் தெய்வங்களான திருமால் (முல்லை) முருகன் (குறிஞ்சி) வேந்தன் (மருதன்) வருணன் (நெய்தல்) கொற்றவை (பாலை) முதலியனகூட அன்றைய காலங்களில் நில அடிப்படையிலும் தொழில் அடிப்படையிலும் உருவான தெய்வங்களாகவே காணப் படுகின்றன. ஆனால் பிற்காலத்தில் தெய்வங்களுக்கு ஆரியச் சார்பு கற்பிக்கப்பட்டு அனைத்தும் வேதக்கடவுளர்களாகப் பேசப்பட்டனர் என்பதை இன்றைய சமய வரலாறு நமக்குக் காட்டும்.

இந்து சமயம் என்பது தொடக்கத்தில் வேதகாலத் தெய்வங்களான இந்திரன், பிரமன் ஆகியோரையும் பிற்காலத்தில் சிவன், திருமால், முருகன் ஆகிய தெய்வங்களையும் வழிபடும் மரபைத் தன்னகத்தே கொண்டுள்ளது. ஆனால் பொது மக்களில் பெரும்பாலோர் மூதாதையர் வழிபாடு - தாவர - விலங்கு வழிபாடு - மனித விலங்குருவ வழிபாடு - புனிதப் பொருள் வழிபாடு - குலக்குறி வழிபாடு ஆகியவற்றை வழிபாட்டு மரபாகக் கொண்டுள்ளனர்[8].

ஆக இந்துசமயக் கடவுள் வழிபாடு ஆகமவிதிகளின்படி வழிபடப்படுவதென்றும் பொது மக்கள் வழிபடும் நாட்டுப் புறத் தெய்வங்கள் ஆகமவிதிகள் எதுவும் இல்லாமல் ஒரு ஊரினராலோ அல்லது ஒரு சாதியினராலோ அல்லது ஒரு தனிமனிதராலோ வழிபடப்படுவதாகும். பொது மக்கள் வழிபடும் தெய்வவழிபாட்டில் மனிதனின் மேல் சாமி இறங்கும். பூசை செய்யும் பூசாரிகள் பார்ப்பனரல்லாதவர்களாக இருப்பர். உயிர்பலியிடுதல் கட்டாயம் இடம்பெறும். வட்டார வரலாற்றைத் தன்னகத்தே நாட்டுப்புறத் தெய்வங்கள் கொண்டிருக்கும். நாள்வழிபாடு போன்றவை யெல்லாம் இவற்றிற்கு இல்லை. மக்கள் தாங்கள் நினைத்த நேரத்தில் கோயிலுக்கு சென்று பொங்கலிட்டு கெடாய்வெட்டி சாமியாடி வழிபடும் எளிமையான முறையே பெரிதும் நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டில் காணப்படும்.

### சிறுதெய்வம் பெருந்தெய்வம்

ராபர்ட் ரெல்பீல்ட்ஸ் என்ற சமூகவியல் அறிஞர் அமெரிக்க வாழ்க்கை முறையைப் பெருமரபு (Great Tradition), சிறுமரபு (Little Tradition) என்று பிரித்துக் காட்டுவது போலத் தமிழ்நாட்டில் சமய வழிபாட்டையும் பெருந்தெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு என்று வகைப்படுத்துகின்றனர். ஞானிகள், சமயச் சான்றோர், இலக்கிய ஆசிரியர் ஆகியோரின் மரபு பெருமரபாகும். சிறுமரபு, பாமரமக்களின் மரபாகும். பெருமரபு பள்ளிகளாலும் கோயில் களாலும் வளர்க்கப்படுவது. சிறுமரபோ எழுத்தறிவற்ற பாமர மக்களிடம், அவர்களது கிராம சமுதாயத்தில் தானே தோன்றி வளர்வதாகும். பெருமரபு சான்றோரால் நினைவு கூர்ந்தும் செப்பம் செய்யப்பட்டும் வளர்க்கப்படுகிறது. சிறுமரபு, அவ்வாறு நினைவு கூர்ந்தும் செப்பம் செயயப்பட்டும் வளர்க்கப்படுவதில்லை. பெருமரபு நூல்களின் மூலம் பாதுகாக்கப்படுகிறது. எனவே, இதனை நூல்களின் மூலம் அறிந்து கொள்ள இயலும். சிறுமரபினை மக்கள் வழக்கின் மூலமே அறிந்து கொள்ள இயலும்[10].

இதிலிருந்து நாட்டுப்புற மக்கள் வழிபடும் மாரியம்மன், கருப்பச்சாமி, அய்யனார், கன்னிமார் போன்ற கிராமத் தெய்வங்கள் என்றும் சிறுதெய்வங்கள் என்றும் வடமொழி நூல்களில் குறிக்கப்பட்டு மரபு வழியாகப் போற்றப்படும்

இந்துசமயம் பெருந்தெய்வம் என்றும் கருதப்படுகின்றன. இந்த இரண்டு பெயர்களையும் இன்றைய அறிஞர்கள் தவறான வழக்குகள் என்று கருதி இன்றைய ஆய்வில் பயன்படுத்துவதில்லை.

நாட்டுப்புறத் தெய்வங்களை கிராம தெய்வம், திராவிட தெய்வம் என்று பெயரிட்டு அழைக்கும் துளசி இராமசாமி நாட்டுப் புறத் தெய்வம் என்றே கிராம தெய்வங்களை அழைக்கின்றார். இவரின் கருத்துப்படி பெருமரபாக்கப்பட்ட அழகரும், சொக்கரும், மீனாட்சியும் வெவ்வேறு காலங்களில் மக்களிடையே வாழ்ந்து மடிந்தவர்களேயாவர். இவர்கள் நாட்டுப்புறத் தெய்வங்கள்தாம் - திராவிடத் தெய்வங்கள்தாம். இன்று இந்துத் தெய்வமாக்கப் பட்டிருக்கிறார்கள். பெருமரபுத் தெய்வங்களாக கொண்டாடப் படுகிறார்கள்[11] துளசி இராமசாமி குறிப்பிடும் திராவிடத் தெய்வம் என்ற வகைப்பாட்டை ஏற்க முடியாது. தமிழர் தெய்வம் தமிழர் கடவுள் என்பதே பொருந்துவதாகும். காரணம் திராவிடம் எனும் கருத்தை தமிழர் தவிர வேறு யாரும் ஏற்காதநிலையில் தமிழர் கடவுளர்களுக்கு திராவிடத் தெய்வம் என்று ஏன் பெயர் சூட்டவேண்டும்.

### நாட்டுப்புறச் சமயம் (Folk Religion)

கிராமத் தெய்வம், கிராம தேவதை என்ற சொற்களால் இத்தெய்வங்களை அழைப்பதும் நடைமுறை உண்மையுடன் ஒத்துவரவில்லை. ஏனெனில் நகரங்களிலும் இத்தெய்வங்கள் வழிபடப்படுவதால் கிராம தெய்வம் என்றழைப்பதும் பொருத்த மற்றதாகிறது. சிறுதெய்வங்கள் என்றழைக்கப்படும் தெய்வங்கள் நாட்டுப்புற மக்களால் (Folk) வணங்கப்படுவதால் இவற்றை நாட்டுப்புறத் தெய்வங்கள் (Folk Gods) என்றும் இத்தெய்வங்கள் வணங்கும் வழிபாட்டு மரவு மிகப் பரவலாக உள்ளமையால் பெரு வழக்காண்மைச் சமயம் (Popular Religion) என்றும் நாட்டுப்புற மக்களால் பின்பற்றப்படுவதால் நாட்டுப்புறச் சமயம் (Folk Religion) என்று அழைப்பதே பொருத்தமானதாகும்[12]. ஆக பெரும்பாலான நாட்டுப்புற மக்களால் வழிபடும் கடவுளர்களை சிறு தெய்வம் என்று சொல்வதைவிடுத்து அம்மக்கள் போற்றி வழிபடும் கடவுளர் என்றே ஏற்றுக் கொண்டு நாட்டுப்புறத் தெய்வங்கள், நாட்டுப்புறக் கடவுளர்கள், நாட்டுப்புறச் சமயம் என்றே பொருள் கொள்வதே சிறப்பானதாக அமையும். கடவுளர்களில் சிறிது, பெரிது

என்பதெல்லாம் இல்லை. அவரவர் வழிபடும் கடவுள் அவர் மனதளவில் பெரிய கடவுள்களே ஆவர். வழிபாட்டில் சிறுமரபு, பெருமரபு என்று பிரிப்பது சமய ஆய்வில் ஏற்றுக் கொள்ளமுடியாதது மட்டுமல்லாது தவறானதும் ஆகும்.

### சமயத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

ஒரு குறிப்பிட்ட விலங்கு, தாவரம் அல்லது குலக்குறி, இயற்கைப் பொருள், ஆவி, முன்னோர், தெய்வம் ஆகிய எந்த ஒன்றின் ஆற்றல் மீது கொண்டுள்ள அனைத்து வகையான நம்பிக்கைகளும் சடங்குகளும் வழிபாடும் சேர்ந்ததே வழிபாட்டு மரபாகும்[13]. இன்றைய சமயத்தின் பொருளையோ இயல்புகளையோ புராதன காலத்திய மனிதனிடம் காண முடியாது. ஆயினும் அவனிடம் தோன்றிய எண்ணங்களே இன்று சமயம் எனும் பேருருக் கொள்ள அடிப்படையாயின எனலாம். பழங்குடி மக்களிடம் காணப்பட்ட சமயம் மந்திரம் (Magic) இயற்கைவழிபாடு (Nature Worship) குலக்குறி வழிபாடு (Totemism) புனிதப் பொருள் வழிபாடு (Fetishism) விலக்கு (Taboo) ஆவி வழிபாடு (Animism) உயிர்ப் பொருள் வழிபாடு (Animatism) முன்னோர் வழிபாடு (Ancestoral Cult) பல தெய்வவழிபாடு (Polytheism) என்றவாறு அமைந்தன. இவ்வாறான வழிபாட்டுக் கூறுகள் அனைத்தையும் உள்ளடக்கியதே இன்றைய நாட்டுப்புறச் சமயம் ஆகும். கொங்குநாட்டில் வழங்கும் நாட்டுப்புறச் சமயமும் இவ்வாறான புராதனச் சமயக் கூறுகளை உள்ளடக்கியே காணப்படுகின்றன. இப்பழஞ் சமயத்தின் கூறுகளை வருமாறு சான்றுகளுடன் காணலாம்.

### மந்திரம் (Magic)

தொல் சமயத்தின் (Primitive Religion) வடிவங்களுள் மந்திரமும் ஒன்று. இது சடங்குகளின் தொகுப்பாக அமைந்ததாகும். இயற்கையின் இயக்கங்களைத் தன்னால் கட்டுப்படுத்த முடியவில்லை என்ற நிலையில், ஏதோ ஒரு மீஇயற்கை சக்தி (Super Natural Power) இதனைக் கட்டுப்படுத்துவதாக நம்பினான். இதனைத் திருப்திபடுத்த சில சடங்குகளைச் செய்தான். இவ்வாறான நம்பிக்கையிலிருந்து சமயம் படிப்படியாக வளர்ந்தது[14]. பொருளாதார நலன்களைப் பெறுவதற்காகப் பல்வேறு வகையான மந்திரச் செயல் முறைகள் புராதன மக்களிடம் வழக்கிலிருந்தன.

இம்மந்திரத்தினால் தாங்கள் வேண்டியது கிடைக்காமல் போனபோது ஏதோ ஒரு மீவியற்கை ஆற்றல் (Supernatural Power) தங்களது மந்திரச் செயல்களைக் கட்டுப்படுத்துகிறது என்று நம்பினர். இம் மீவியற்கை ஆற்றல்களைத் திருப்திப்படுத்த சில சடங்குகளைச் செய்தனர். இச்சடங்குகள் பலியிடுதல் மற்றும் படையலாக அமைந்தன. இம்மீயியற்கைச் சக்திகள் பின்னர் கடவுள் என்ற தனியான நிலைக்குக் கொண்டுவரப்பட்டது. மந்திரச் சடங்குகளை முன்னின்று நடத்திய இனக் குழுத்தலைவன் அல்லது மந்திரவாதி கடவுளுக்கு வழிபாடு செய்யும் பூசாரியாகச் செயல்பட்டதன் எச்சமாக இன்றைய பூசாரிகள் மந்திரவாதிகளாகச் செயல்படுவது அமைகிறது. இவ்வாறாக மந்திரத்திலிருந்து சமயம் படிப்படியாகத் தோன்றியது. இவ்வாறான மந்திரக் கூறுகளை இன்றைய கொங்கு நாட்டுக் கோயில் வழிபாடுகளில் காணமுடியும். காட்டாக அம்மன் வழிபாட்டில் இடம் பெறும் முளைப்பாலிகைச் சடங்கில் ஆடப்படும் கும்மி நடனம் பயிர்வளம் வேண்டும் ஒருவகைப்பாவனை நடனமாக (Mimetic Dance) அமைகிறது. கோயில்களில் நேர்த்திக்கடனாக வெண்கலம் அல்லது மண்ணால் உருவம் செய்து காணிக்கையாக்குதல் ஒத்த மந்திரத்துடன் (Sympathetic Magic) தொடர்புடையது ஆகும். இதல்லாமல் முனீஸ்வரர் கோயில்களில் இடம் பெறும் பேய்விரட்டுதல் சடங்குகள் போன்றன தீய மந்திரத்தில் (Black Magic) அடங்கும். இவ்வகையில் நாட்டுப்புறச் சமயத்தில் மந்திரத்தின் கூறுகள் பெரிதும் காணப்படுவதை இவ்வழிபாட்டு முறைகளில் காணமுடியும்.

### 2. இயற்கை வழிபாடு (Nature Worship)

இயற்கை வழிபாடு இறைவழிபாட்டின் தோற்றுவாய் ஆகும். பேரிடியையும் பெருமழையையும் பொங்கும் கடலையும் பெருகும் ஆற்றையும் சூறைக்காற்றையும் கண்டு அஞ்சிய அன்றைய மனிதன் இயற்கையை வழிபட்டான். ஆதி மனிதன் எல்லாப் பொருட் களுக்கும் உயிர் இருப்பதாக நம்பினான். இயற்கைப் பொருட்கள் அனைத்திற்கும் உயிருண்டு என்ற கொள்கையின்படி அமைந்ததே அனிமேட்டிசம் எனும் உயிர் பொருள் வழிபாடு (Animatism) எனும் கோட்பாடாகும். இக்கொள்கை ஆவி வழிபாடு (Animism) என்ற கொள்கையிலிருந்து சற்று மாறுபட்டது ஆகும். உயிர்ப்பொருள்

வழிபாடு மரத்தையும் மண்ணையும் கல்லையும் உயிருள்ள ஆனாகக் கருதுகிறது.

ஆவி வழிபாடு மரத்தையும் மண்ணையும் ஆவி குடி கொண்டுள்ள இடமாகக் கருதுகிறது. இவ்வாறான உயிர்ப் பொருள் வழிபாடு பண்டைக்காலத்தில் வழக்கிலிருந்ததற்குச் சங்க இலக்கியம் சான்று பகர்கிறது. மலை, நதி, ஏரி, மரம், சூரியன், சந்திரன் ஆகிய இயற்கைப் பொருட்களுக்கு உயிர் உண்டு என்ற நம்பிக்கையில் சங்ககால மக்கள் அவற்றை வழிபட்டனர். இதே வழிபாடு கொங்கு நாட்டிலும் இன்றும் காணப்படுகின்றது. பழனிமலை, வேட்டைக்காரன்மலை, மருதமலை, வெள்ளியங்கிரிமலை, திருமூர்த்திமலை போன்ற வழிபாட்டிடங்கள் மலையில் தெய்வம் உறைவதாக நம்பி வழிபடும் இயற்கை வழிபாட்டைச் சேர்ந்ததாகும். இது போன்றே சூரியனை சூரிய நமஸ்காரம் எனும் பெயரிலும் நிலவை நிலாப் பிள்ளை வழிபாடு எனும் பெயரிலும் நதியை ஆடிப்பெருக்கு எனும் பெயரிலும் நிலத்தை பூமா தேவியாகவும், நெருப்பை அக்னிக் கடவுளாகவும், மரங்களைத் தலவிருட்சங்களாகவும், அரசமரம் வேப்பமரத்தை தெய்வம் உறையும் இடமாகக் கொண்டு நாட்டுப்புற மக்கள் வழிபட்டு வருவதைக் காணமுடிகின்றது. இவ்வகையில் கொங்கு நாட்டு நாட்டுப்புறச் சமயத்தில் இயற்கை வழிபாடு பெரிதும் காணப்படுவதைக் காணமுடியும்.

### 3. குலக்குறிவழிபாடு (Totemism)

குலக்குறி அல்லது குலமரபுச் சின்னம் (Totem) என்பது குறி அல்லது அடையாளத்தைக் குறிக்கும். ஓர் இனத்தைப் பாதுகாக்கிற ஆவி வாழ்வதாக நம்பப்படுகிற மிருகம் அல்லது தாவரத்தைப் பிரதிநிதித்துவப்படுத்துகிற சின்னமாக இக்குலக்குறி பயன்படுத்தப் பட்டது. ஒவ்வொரு குலமும் ஒவ்வொரு வகையான விலங்கோடும் அல்லது தாவரத்தோடும் அல்லது அந்த வகைகளின் குழுவோடும் தொடர்பு கொண்டிருந்தது. அந்த விலங்கு அல்லது தாவரம் அந்த குல மரபின் சின்னமாகக் கருதப்பட்டது. உலக முழுவதிலும் இக்குலக்குறி நம்பிக்கை இனக்குழு மக்களிடையே வழக்கிலிருந்தது. இந்த நம்பிக்கை வேட்டை வாழ்க்கையிலிருந்தும் இதனைத் தொடர்ந்து வந்த வேளாண்மைச் சமூகத்திலிருந்தும் தோன்றியது ஆகும். இந்தியாவில் தற்காலத்திலும்கூட இனக்குழு மக்கள் ஒரு

விலங்கு, செடி அல்லது சடப்பொருளோடு தங்களுக்குத் தொடர்பிருப்பதாக நம்புகிறார்கள். இந்நம்பிக்கையுடையவர்களைக் குலக்குறியுடைய மக்கள் (Totemistic people) என்று மானுடவியலார் அழைக்கின்றனர்[15]. தமிழகத்தில் குறிப்பாகக் கொங்கு நாட்டில் வாழும் தேவேந்திர குல வேளாளர், கவுண்டர் இனத்தவர்களிடத்தில் குலதெய்வ வழிபாட்டில் குலக்குறி வழிபாட்டின் எச்சங்கள் காணப்படுகின்றன. கொங்கு வேளாளர் கவுண்டர்களிடம் சுமார் 150 கூட்டப் பெயர்கள் காணப்படுவதாகவும் இதில் ஆந்தை கூட்டத்தார் ஆந்தைப் பறவையை விரட்ட மாட்டார்கள். பிறர் விரட்டுவதையும் அனுமதிக்க மாட்டார்கள். காடை கூட்டத்தார் காடைப் பறவையை உண்பதில்லை. பெருங்குடி கூட்டத்தார் வரகுச் சோறு உண்ண மாட்டார்கள். இவர்களை 'வரகு உண்ணா கூட்டம்' என்று வழங்குவர்[16]. கொங்கு நாட்டில் வாழும் தேவேந்திர குல வேளாளர் ஒரு பிரிவினர் 'வன்னிச்சிக் கூட்டம்' இவர்கள் வன்னி மரத்தை வழிபடுபவர்கள் ஆவர்[17]. இதே போன்று நாகபாம்பை வழிபடுபவர்கள் நாகன் கூட்டம் என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் நாக பாம்பை அடிக்கமாட்டார்கள்[18]. இவ்வாறு விலங்குகளையோ தாவரங்களையோ கடவுளாகக் கருதி வழிபடும் மரபு குலக்குறி வழிபாடாகும்.

### 3. புனிதப் பொருள் வழிபாடு (Fetishism)

ஆற்றலற்ற ஒரு பொருளை அதீத ஆற்றல் இருப்பதாக நம்பி அதனை வழிபடுவது புனிதப் பொருள் வழிபாடாகும். 1760ல் சார்லஸ் டி பிராசே (Charles De Brosses) என்பவர் புனிதப் பொருள் வழிபாடு (Fetishism) பற்றி ஒரு நூலை வெளியிட்டார். இந்நூலில் அவர் அனைத்துச் சமயங்களும் புனிதப் பொருள் வழிபாட்டிலிருந்து வந்தவை என்று குறிப்பிட்டுள்ளார்[19]. உலகளவில் இந்நம்பிக்கை இன்றும் நிலவுகிறது. கிறித்துவ மதத்தில் சிலுவையும், பைபிளும் வழிபடுபொருளாகக் கருதப்படுகின்றன. இஸ்லாமில் குரானும் இந்துமதத்தில் கீதையும், இராமாயணமும் கடவுள் நிலைக்குக் கருதப்படுகின்றன. இது போன்றே நாட்டுப்புறச் சமயங்களில் கடவுளின் ஆயுதங்கள், தலவிருட்ச மரங்கள், கல், பாறை, மலை, கடவுளர் தொடர்பான பொருட்கள் அனைத்தும் கடவுளர்களாகக் கருதி வழிபடுவதைக் காணமுடியும். தமிழகத்தில்

திருமணமான ஒரு பெண் தான் அணிந்திருக்கும் தாலியைத் தெய்வமாகக் கருதி வழிபடுகின்றார். ஒரு வியாபாரி தனது தராசை தொட்டுக் கும்பிடுகின்றார். உழவன் தனது ஏரினைப் பொன்ஏர் என்று விழாவெடுத்து வழிபட்டு உழத்தொடங்குகின்றான். கல்வியாளன் தான் படிக்கும் நூல்களை சரஸ்வதி பூசையன்று தொட்டு வணங்குகின்றான். இறந்து பட்டவர்களின் முன்னோர் வழிபாட்டில் அவர்களின் ஆடை, அணிகலன்களை வைத்து வழிபடும் வழக்கம் காணப்படுகின்றது. ஒரு மந்திரவாதி தான் அணிந்திருக்கும் தாயத்தைத் தொட்டு வணங்கிய பின்னர்தான் தனது மந்திரவாதச் சடங்கைத் தொடங்குகின்றார். மந்திரவாதிகள் வைத்திருக்கும் மண்டையோடு, மந்திரபொம்மை, மந்திரக்கல் ஆகிய அனைத்து அதிக ஆற்றல் இருப்பதாகக் கருதி வழிபடப்படுகின்றன. இவையெல்லாம் ஒரு பொருளிடம் மனிதன் கொள்ளும் நம்பிக்கையே புனிதப்பொருள் வழிபாட்டின் அடிப்படையாகும்.

### 5. விலக்கு (Taboo)

'தாபு' (Taboo) என்ற இச்சொல்லின் பொருள் எல்லை வரையறுத்துப் பிரிக்கப்பட்ட (Marked of) என்பதாகும். இயல் கடந்த வல்லமையுடைய அல்லது ஆவியுருக்களுடன் தொடர்பு கொண்ட எந்தப் பொருளும் விலக்கப்பட்டதாக இதற்குப் பொருள் சொல்லப்படுகிறது. இவ்வாறான விலக்குப்பற்றிய நம்பிக்கைகள் சமயத்துடனும், சமூகப் பண்பாட்டுடனும் தொடர்புடையதாகக் காணப்படுகின்றன. விலக்கு எனும் சொல் புனிதம், புனிதமற்றது என்ற இரண்டு மாறுபட்ட பொருளைக் கொண்டது. காட்டாகப் புனிதமானவர்களாகக் கருதப்படும் பூசாரிகளும், புனிதமற்றவர் களாகக் கருதப்படும் பூப்படைந்த பெண்களும் விலக்காகக் கருதப்படுவதைக் காணலாம். கடவுளோடு தொடர்புடைய அனைத்தும் புனிதமானவை எனவே இப்பொருட்கள் மதிப்புடையவை, ஆற்றலுடையவை எனவே பிறரால் தொடுவதிலி ருந்து விலக்கி பாதுகாக்கப்படுகிறது. பூப்புக் காலத்தில் பெண்கள் அசுத்த முடையவர்களாக கருதப்படுவதால் இவர்கள் கோயிலுக்குள் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. விரதமிருப்பது புனிதம், விரதமின்மை புனிதமற்றது என்ற நம்பிக்கை கோயில் விழாக்காலங்களில் வழக்கிலிருப்பதையும் பார்க்க முடியும்.

இவ்வாறு புனிதம், புனிதமற்றது என்ற கருத்தும் சமயத்தின் தோற்றத்தில் பெரும் பங்காற்றுகின்றன.

### 6. ஆவி வழிபாடு (Animism)

வரலாற்றுக்கு முந்திய ஆதிகுடிமக்கள் மனதில், இறந்துபட்ட பின்னர் மனிதன் என்னவாகின்றான் என்ற வினாத் தோன்றியது மனிதன் இறப்பதையும் பிறப்பதையும் கண்டனர். இதனால் இறந்தவர்கள் மீண்டும் பிறக்கின்றனர் எனக்கருதினர். இந்நம்பிக்கை இன்றும் நிலவுகிறது. இறந்தவர்களின் ஆவி அவற்றிற்குரிய காலம் வரை வாழ்ந்து, வாழ்கிறவர்களுக்கு நன்மையும் தீமையும் செய்கின்றது என்றும் நம்பினர். இவ் ஆவிகளில் நல்லன எனவும் தீயன எனவும் பிரித்துக் கண்டனர்.

இவ்வுலகில் நல்லவர்களாக வாழ்ந்து இயற்கையாக மரணமடைந்தவர்களின் ஆவி நன்மை செய்யும் எனவும் கொடியவர்களாக வாழ்ந்து இறந்து போனவர்களின் ஆவி தீமை செய்யும் எனவும் நம்பப்படுகிறது. நன்மை மட்டுமே செய்யவல்லது என்ற நம்பிக்கையில் நல்ல ஆவிகளை வழிபட்டனர். கொலை, தற்கொலை, விபத்து போன்றவற்றால் அகால மரணமடைந்தவர் களின் ஆவிகள் சுடுகாடு, மலை, மரம், பாறை போன்றவற்றில் உறைந்து வாழும் என்றும் இவை மனிதர்களுக்குத் தீமை செய்யும் என்றும் நம்பினர். இவ் ஆவிகளைக் காத்துக் கருப்பு, பேய், பிசாசு, பூதம், முனி என்று பெயரிட்டு அழைத்தனர். இவ் ஆவிகளினால் தமக்குத் தீமை ஏற்படாதிருக்க இவை உறைந்துள்ள இடங்களில் இவற்றுக்கு வழிபாடு செய்கின்றனர்.

இவ்வகையில் இறந்துபட்ட மனிதர்களின் ஆவிகளைத் தெய்வமாகக் கருதிவழிபடுவது ஆவி வழிபாடாகும். ஆவி பற்றிய நம்பிக்கை ஆவியுலகக் கோட்பாட்டின் (Animism) அடிப்படையாகும். ஆவி வழிபாடு கொங்கு நாட்டு நாட்டுப்புறச் சமயத்தில் பெரிதும் இடம் பெற்றிருப்பதை காணமுடியும். குலதெய்வக் கோயிலாக இடம்பெற்றிருக்கும் வீரமாத்தி, பொன்னர், சங்கர், கருப்பணசாமி, முனீஸ்வரன், முனி, பேச்சியம்மன், பேச்சியம்மாள் போன்ற அனைத்துக் கோயில்களுமே ஆவியியல் கோட்பாட்டின்படி வழிபடப்படும் இறந்துபட்ட ஆவிகளின் வழிபாடே ஆகும். காட்டாக ஈரோடு மாவட்டம் கொடிவேரி அணையில் வழிபடப்படும் அணை

முனியப்பன் தெய்வம் அணையை உடையாமல் காப்பதாக நம்பப்படுகிறது. இப்பகுதிகளில் வழிபடப்படும் சங்கிலி முனியப்பன், மகாமுனி, செம்முனி, மந்தைமுனி, தட்டுக்காட்டு முனியப்பன், சடாமுனி, சின்ன முனி, குளத்து முனி, தாழை முனி இம்முனிகளெல்லாம் ஏதோ ஒருவகையில் இறந்துபட்ட ஆவிகளாகவே கருதப்படுகின்றன. நாட்டுப்புறத் தெய்வங்களாக இருந்த இம்முனி தெய்வங்கள் இன்று முனீஸ்வரன் என்ற பெயரில் பெருந்தெய்வ நிலைக்கு மாறிவருவதைக் காணமுடிகின்றது. இதற்கு உதாரணமாக பவானி வட்டத்திலுள்ள பட்டலூர் செம்முனீஸ்வரர் கோயிலைச் சொல்லாம். நாள் வழிபாடு, வாரவழிபாடு என்ற முறைகள் இடம் பெற்றாலும் 'பலியிடுதல்' எனும் மரபு இன்னமும் தவறாது இடம் பெறுவதால் இக்கோயில் நாட்டுப்புறக் கோயில் மரபை இன்னமும் கொண்டுள்ளது எனலாம்.

### 7. முன்னோர் வழிபாடு (Ancestoral Worship)

தமிழகத்தில் குறிப்பாகக் கொங்கு நாட்டில் வழிபடப்படும் நாட்டுப்புற வழிபாட்டு மரபுகளில் பெரிதும் இடம் பெறுவது இறந்துபட்ட முன்னோர்களின் வழிபாடே ஆகும். இம்முன்னோர் வழிபாடு அன்பின் அடிப்படையிலும் அச்சத்தின் அடிப்படையிலும் வழிபடப்படுவதாகும். சங்க காலத்தில் குறிக்கப்படும் நடுகல் வழிபாடு கூட வீரத்தைப் பாராட்டும் வீர வழிபாடு என்றாலும் ஒரு வகையில் முன்னோர் வழிபாடே ஆகும். கொங்கு நாட்டு நாட்டுப்புற வழிபாட்டில் இடம் பெறும் குடும்பத்தெய்வம், குலதெய்வம், காவல்தெய்வம், ஊர்ப்பொதுத் தெய்வம் போன்ற அனைத்திலும் இறந்துபட்ட முன்னோரை வழிபடும் தன்மை காணப்படுகின்றன. ஆவி வடிவில் வாழும் முன்னோர்களும், குலத்தலைவர்களும் தமக்கு நன்மை செய்வார்கள் என்று புராதன மக்கள் நம்பினார்கள். இந்நம்பிக்கையின் அடிப்படையில் இறந்துபட்ட முன்னோர்களை வழிபடத் தொடங்கினர். இன்று தமிழகத்தில் இறந்தவருக்காகச் செய்யப்படும் இறப்புச் சடங்குகள் முன்னோர் வழிபாட்டின் எச்சம் எனலாம். இறந்துபட்ட மனிதனின் ஆவியைச் சடங்குகளினால் தெய்வ நிலைக்கு உயர்த்துவதாகவே இறப்புச் சடங்குகள் அமைகின்றன. இன்று இறந்தவருக்காகச் செய்யப்படும் நீத்தார் நினைவுநாள் வழிபாடு கூட முன்னோர் வழிபாட்டின் ஒருவகையினதே ஆகும். இன்று

தெய்வங்களாக விளங்கும் காளி, கருப்பன், முனி, மாரி, பேச்சி, வீரமாத்தி, மாசாணியம்மன் அனைத்தும் உயிருடன் வாழ்ந்து இறந்துபட்ட மனிதர்களின் வரலாற்றையே பெற்றிருக்கின்றன என்பது முன்னோர் வழிபாட்டின் தன்மையை எடுத்துக்காட்டும்.

### 8. பலதெய்வவழிபாடு (Polytheism)

ஒரு கடவுளை மட்டும் வழிபடும் தெய்வமாகக் கருதாமல் பல தெய்வங்களையும் கடவுளராக ஏற்றுக் கொள்வது பல தெய்வ வழிபாடாகும். யூதம், கிருத்துவம், இஸ்லாம் ஆகிய மூன்று சமயங்களும் ஓரிறைக் கோட்பாட்டை வலியுறுத்துகின்றன. இந்து சமயத்தில் பல தெய்வ வழிபாடு காணப்பட்டாலும் ஒரு தெய்வத்தையே படைப்பாளராகவும், பக்திக்கு உரியவராகவும் கருதும் போக்கு இருக்கிறது. ஆனால் நாட்டுப்புறச் சமயத்தில் பல்வேறு தெய்வங்களையும் ஒரே நேரத்தில் வழிபடும் தன்மைக் காணப்படுகின்றன. காட்டாகக் கருப்பணசாமி கோயில் குல தெய்வக் கோயிலாக இருந்தால் அங்கு ஆவி வடிவிலான முனி காவல் தெய்வமாக இருக்கும். ஏன் முருகன், திருமால், பார்வதி, லட்சுமிகூட அங்கே எதோ ஒரு வகையில் கடவுளர்களாக இருப்பர். காட்டுக்கருப்பன் காட்டைக் காப்பதாகவும், மாரியம்மன் ஊரைக்காப்பதாகவும், கன்னிமார், அய்யனார் போன்றோர் மழைக் கொடுக்கும் தெய்வமாகவும் கருதப்படுவர். இவ்வாறு நாட்டுப்புறச் சமயத்தில் எல்லாக் கடவுளர்களுமே சக்தியுள்ள கடவுளர்களாகக் கருதப்பட்டு வழிபடப்படும். இவ்வகையில் நாட்டுப்புறச் சமயம் பலதெய்வ வழிபாட்டுக் கொள்கையையும் தன்னுள் கொண்டு விளங்குவதாகும் என்றால் மிகையாகாது.

### தொகுப்புரை

1. இயற்கைக்கு அப்பாற்பட்ட ஓர் ஆற்றலிடம் வழிபாட்டின் மூலமும் வேண்டுதல்கள் மூலமும் மனிதன் தொடர்பு கொள்ள முயல்வதைச் சமயம் (Religion) என்று வரையறை செய்யலாம்.

2. ஆங்கிலேயர் இந்தியாவிற்குள் நுழைவதற்கு முன்னர் இந்துமதம், இந்து சமயம் என்ற ஒரு மரபு காணப்படவில்லை. ஆங்கிலேயர் அரசியல் காரணங்களுக்காக பலதெய்வ வழிபாடையுடைய

இந்திய மக்களை அவர்கள் வசதிக்காக இந்துக்கள் என்று அழைத்தனர். ஆனால் அன்று முதல் இன்று வரை இந்தியாவில் காணப்படும் சமயம் மக்கள் வாழிடம், சாதி, தொழில்கள் சார்ந்து பல வகையினதாக அமைந்தன. இச்சமயத்தன்மையையே நாட்டுப்புறச் சமயத்தில் இன்றும் நாம் காணமுடிகின்றது.

3. நாட்டுப்புற மக்கள் பெரும்பான்மையாக வழிபடும் கடவுளர்களைச் சிறுதெய்வம் என்று வகைப்படுத்துவது பொருத்தமாக இல்லை. இத்தெய்வங்களை நாட்டுப்புறத் தெய்வங்கள் (Folk Gods) என்றும் இவ்வழிபாடுகளை நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு (Folk Worship) என்றும் நாட்டுப்புறச் சமயம் (Folk Religion) என்றும் அழைப்பதே சரியானதாகும்.

4. கொங்கு நாட்டில் காணப்படும் நாட்டுப்புறச் சமயம் புராதனச் சமயமான (Primitive) பழஞ்சமயத்தின் கூறுகளைத் தன்னுள் கொண்டு விளங்குகின்றது. இவ்வகையில் இயற்கை வழிபாடு, குலக்குறி வழிபாடு, புனிதப் பொருள் வழிபாடு, விலக்கு, ஆவி வழிபாடு, முன்னோர் வழிபாடு, பலதெய்வ வழிபாடு என்றவாறு பல்வேறு புராதனச் சமயக் கொள்கைகளை கொங்கு நாட்டு நாட்டுப்புறச் சமயம் கொண்டுள்ளது.

## குறிப்புக்கள்

1. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 3, ப. 794.
2. பக்தவத்சலபாரதி. சீ., பண்பாட்டு மானுடவியல், ப. 54, ப. 794.
3. தர்மராஜ். வி. மனிதனும் சமுதாயமும். ப. 5-6.
4. மேலது
5. ஜார்ஜ் தாம்சன், சமயம் பற்றிய ஒரு கட்டுரை (மொழி பெயர்ப்பு)

6. சிவசுப்பிரமணியன். ஆ., தமிழக நாட்டார் சமய ஆய்வு, நாவாவின் ஆராய்ச்சி, அக்டோபர், 1989, ப.200-201
7. லூர்து. தே., நாட்டார் தெய்வம் : வரையறைகளும், அடையாளமயக்கமும், தமிழக நாட்டுப்புறத் தெய்வங்கள் பற்றிய சிறப்பு மாநாடு, பிப்ரவரி, 1999. ப. 1.
8. சிவசுப்பிரமணியன், ஆ. மு.கா.ப. ப. 202.
9. சரசுவதி, வி. நாட்டுப்புறப்பாடல்கள் சமூக ஒப்பாய்வு, ப. 47.
10. இராமநாதன், ஆறு. நாட்டுப்புறவியல் ஆய்வு முறைகள், ப. 247.
11. துளசி இராமசாமி, மங்கலதேவி கண்ணகி கோட்டம், ப. 7
12. சிவசுப்பிரமணியன், ஆ., மு.கா.ப. ப. 204.
13. பக்தவத்சலபாரதி. சி., நாட்டார் தெய்வங்களும் வழிபாட்டுக் குழுக்களும் (கட்டுரை), தமிழக நாட்டுப்புறத் தெய்வங்கள் பற்றிய சிறப்பு மாநாடு, பிப்ரவரி 1999, ப. 1.
14. ஞானசேகரன். தே., நாட்டார் சமயம் தோற்றமும் வளர்ச்சியும், ப. 10
15. மேலது, ப. 46
16. கிருஷ்ணசாமி, க., கூட்டமும் திருமணமும், ப. 6
17. இக்கூட்டத்தினர் கோவையிலுள்ள வன்னியர் பாளையத்தில் வாழ்ந்து வருகின்றனர்.
18. பழனியிலுள்ள தென்பழனியில் வாழ்ந்து வரும் கரியான் குடும்பன் வகையாறாவின் தெய்வம் நாகபாம்பு ஆகும்.
19. ஞானசேகரன். தே., மு.கா.ப. ப. 115

# 2. நாட்டுப்புறத் தெய்வ வகைகள்

மக்கள் வாழ்வில் வளமும் நலமும் வேண்டி பல்வேறு வகையான தெய்வங்களை வழிபட்டு வந்தாலும் கொங்கு நாட்டில் வழிபடப்படும் தெய்வங்களைக் குடும்ப தெய்வம், குல தெய்வம், ஊர்ப் பொதுத்தெய்வம், காவல் தெய்வம் என்றவாறு நான்கு வகைக்பபடுத்திக் காணமுடிகின்றன. இவ்வியல் இந்நான்கு வகைத் தெய்வங்களின் தோற்றம் வரலாறு என்றவாறு வகைப்படுத்தி விளக்க முற்படுகின்றது. மேலும் இத்தெய்வங் களின் மேல் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளையும் அவற்றிற்கான காரணங்களையும் விளக்க முற்படுகின்றது.

**தெய்வ வகைகள்**

நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபாட்டின் அடிப்படையில் துளசி இராமசாமி அவர்கள் ஆறுவகைகளாக வகைப்படுத்துவார்[1]. அவை வருமாறு

1. ஊர்த் தெய்வங்கள்
2. இனத் தெய்வங்கள்
3. குல தெய்வங்கள்
4. மாலைத் தெய்வங்கள்
5. சமாதித் தெய்வங்கள்
6. துணைத் தெய்வங்கள்

சு. சக்திவேல் அவர்கள் நாடுப்புறத் தெய்வங்களை ஐந்தாக வகைப்படுத்துகின்றார்[2]

1. ஆண் தெய்வங்கள்
2. பெண் தெய்வங்கள்
3. குல தெய்வங்கள்
4. சாதித் தெய்வங்கள்
5. ஊர்த் தெய்வங்கள்

பொதுவாக நாட்டுப்புற மக்கள் வழிபடும் தெய்வங்களை அது வழிபடப்படும் நோக்கில் 1. குடும்ப தெய்வம், 2. குல தெய்வம்,

3. பொதுத் தெய்வம் என்றே பெரும்பாலான அறிஞர்கள் வகைப்படுத்துகின்றனர். கொங்கு நாட்டில் வழிபடப்படும் நாட்டுப்புறத் தெய்வங்களை பின்வரும் நான்கு வகைகளில் வகைப்படுத்தலாம். அவை வருமாறு:

1. குடும்பத் தெய்வம்
2. குல தெய்வம்
3. ஊர்ப் பொதுத்தெய்வம்
4. காவல் தெய்வம்

இந்நான்கு வகைத் தெய்வங்களின் தோற்றம், அவற்றின் செயற்பாடுகள், மக்கள் போற்றி வழிபடுவதற்கான காரணங்கள் என்றவாறு வருமாறு காணலாம்.

### 1. குடும்பத் தெய்வம்

குடும்பத் தெய்வமாகவோ தனிப்பட்டவர் தெய்வமாகவோ கருதிக் கொண்டு, இல்லத்தில் வைத்து வழிபாடு செய்யும் தெய்வம் இல்லுறை தெய்வமாகுமென்று தேவநேயப்பாவாணர் குறிப்பிடுவார்[3]. சங்க இலக்கியமான மதுரைக் காஞ்சியில் அணங்குடை நல்லில் என்ற தொடர் தெய்வம் வீட்டில் உறைந்திருப்பதைச் சொல்லும். மேலும் இறந்தார்க்கும் இல்வாழ்வான் என்பான் துணை (42) என்ற குறளின் பொருளிற்கு ஏற்ப கொங்கு நாட்டில் 'வீட்டுச்சாமி' என்றும் 'வீட்டுத் தெய்வம்' என்றும் 'குடும்பத் தெய்வம்' என்றும் பல்வேறு பெயர்களில் வீட்டில் உறைந்துள்ள தெய்வங்களை வழிபட்டு வருகின்றனர். பெரும்பாலான தெய்வங்கள் அவ்வீட்டின் நலனுக்கு உறுதுணை புரிந்து இறந்துபட்ட முன்னோர்களாகவும், திருமணமாகாமல் இறந்துபட்ட கன்னிப் பெண்கள் ஆகவும், கணவனுடன் உடன்கட்டையேறி இறந்துபட்ட பெண்கள் ஆகவும் குடும்பத் தெய்வங்கள் அமைகின்றன. பெரும்பாலும் இறந்துபட்ட மூதாதையர்களின் நினைவாக ஆண்டுதோறும் வழிபடும் நீத்தார் வழிபாடும் குடும்ப தெய்வங்களின் தோற்றமாக அமைகின்றன. இவ்வழிபாட்டில் இறந்துபட்டவரின் ஆடை, அணிகலன்கள், நிழற்படம் ஆகியவற்றை வைத்து வழிபடுவதைக் காணமுடியும். இவ்வாறான வழிபடு பொருளை வைத்திருக்கும் வீடு சாமி வீடு என்று

அழைக்கப்படுகிறது. இக்குடும்ப தெய்வத்திற்குச் சான்றாக பழனிவட்டம் தென்பழனியைச் சேர்ந்த தேவேந்திர குல வேளாளர் கரியாக் குடும்பனின் மனைவி தாடகையம்மாள் நாகப்பாம்பு தீண்டி இறந்துபடுகிறார். இவர் இறந்த பின்னர் அவ்விடத்தில் நாகபுற்று ஒன்று உருவாகியது. இந்த அதிசயம் கண்டு இவரின் வழிவந்தோர் தாடகை நாகம்மாள் என்று இப்புற்றுக்கு இறந்தவரையும் நாகபாம்பையும் இணைத்துப் பெயர் சூட்டி வழிபட்டு வருகின்றனர். இத்தெய்வம் குடும்ப தெய்வ நிலையிலிருந்து வளர்ச்சி பெற்று இப்பொழுது அனைத்து மக்களும் குழந்தைப் பேறு வேண்டியும் நாகபாம்பிலிருந்து தங்களைக் காக்க வேண்டியும் வழிபடும் பொதுத் தெய்வக் கோயிலாக இருப்பதை காணமுடிகின்றது.

இதே போன்று பழனி வட்டம் பெரிய கலையம்புத்தூரில் தேவேந்திர குல வேளாளர் இனத்தைச் சேர்ந்த முத்துவேல் தேவேந்திரர் என்பவரின் 12 வயது மகள் பாப்பாத்தி என்பவள் குளத்தில் மூழ்கி இறந்துபடுகின்றாள். அவள் உடலை குளத்தில் எவ்வளவு தேடியும் கிடைக்கப்பெறாமல் போகவே பாப்பாத்தி தெய்வமாகிவிட்டாளென்று கன்னித் தெய்வமாக வைத்து வழிபடுகின்றனர். தைப்பொங்கலன்று இப்பெண் இறந்து பட்டதால் இவ்வழிபாட்டில் பொங்கல் வைப்பதில்லை. ஆனால் மல்லிகைப்பூ, வளையல், காதோலை, கருகமணி போன்ற பொருட்களை வைத்து தேங்காய் உடைத்து பூசை செய்கின்றனர். இவ்வாறே பழனி வட்டம் பாலசமுத்திரத்தில் 'மாயம்மாள்' என்ற ஒரு பெண்ணுக்கு வீட்டுச்சாமி என்று பெயரிட்டு வழிபட்டு வருகின்றனர். இம்மாயம்மாள் அழகர் கோயிலுக்கு 7 வயதில் தன் பெற்றோருடன் சென்றிருந்த போது திடீரென மாயமாய் மறைந்து விட்டாளாம். அதனால் அழகர் கோயில் தேரோட்ட நாளான ஆடிமாதம் பௌர்ணமியன்று இத்தெய்வத்திற்கு வழிபாடு செய்து வருகின்றனர். இத்தெய்வம் 7 வயதுக் குழந்தை என்பதால் தின்பண்டங்கள், விளையாட்டுச் சாமான்கள், புத்தாடைகள் போன்றவற்றைப் படைத்து வழிபாடு செய்து வருகின்றனர். இதே போன்று கொங்கு நாட்டில் அனைத்து இன மக்களிடமும் வீரமாத்தி, புடவைக்காரி, தங்கம்மன், சோலையம்மன் என்றவாறான பெயர்களில் பல வீட்டுத் தெய்வங்கள்

காணப்படுகின்றன. இந்த வீட்டுத் தெய்வங்கள் பிரசித்து பெற்று குல தெய்வமாக வளர்ச்சி பெற்றுள்ளதையும் காணமுடிகின்றன. காட்டாகக் கோபி வட்டம் கணபதிபாளையம் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தைச் சேர்ந்த குருசாமி சித்தன் குடும்ப தெய்வமான கருப்பணசாமி இன்று இவர் வழிவந்த சகோதரர்கள் அனைவருக்கும் குல தெய்வமாக விளங்குவதைக் காணமுடி கின்றது.

## 2. குல தெய்வம்

ஒரு குடும்பம் பல குடும்பங்களாகப் பிரிந்து போய் அக்குடும்பங்கள் எல்லாம் ஒரே உறவு முறையாகும் போது குலம் ஆகிறது. அதாவது பல பங்காளிகள் உறவு முறையைக் 'குலம்' என்று அழைத்து வருகின்றனர். இதை, ஒரு பொது மூதாதையின் மரபு வழியில் தோன்றியதன் மூலம் ஒருவருக்கொருவர் உறவு கொண்டுள்ள குழுவே குலம் ஆகும்[4] என்று வரைவிலக்கணம் கூறுவர். இவ்வாறாக, ஒரு மூதாதையின் மரபுவழியில் தோன்றியவர்கள், தங்களைப் பங்காளிகள் (சகோதரர்கள்) என்றும் கூறிக் கொள்வதைக் காணலாம். இவ்வாறான ஒருவழிச் சகோதரர்கள் (பங்காளிகள்) மட்டும் வழிபடும் தெய்வம் குல தெய்வம் என்று பொதுவாகப் பெயர் பெறுகிறது. இக்குல தெய்வ வழிபாட்டை ஓர் இனத்தவர் மட்டும் வழிபடும் குல தெய்வம் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் வழிபடும் குல தெய்வம் என்றும் பிரிக்கலாம். ஓர் இனத்தவர் மட்டும் வழிபடும் குலதெய்வம் என்பது ஒரு இனத்தவருள் ஒரு பங்காளிகள் மட்டுமே வழிபடுவதாகும். ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் வழிபடும் குலதெய்வ வழிபாடு என்பது ஒரு தெய்வத்தைப் பல இனத்தவர்களும் குல தெய்வமாக வழிபடுவது. கொங்கு நாட்டில் பொன்னர் சங்கர் வழிபாட்டை அனைத்து இன மக்களும் ஏதோ ஒரு வகையில் தங்கள் குல தெய்வ வழிபாட்டுடன் இணைத்து வழிபடுவதை இதற்குச் சான்றாகக் காட்டலாம். இதே போன்று பழனி வட்டம் ஆயக்குடியிலுள்ள தேவேந்திர குல வேளாளரின் குல தெய்வமான இடும்பன் கோயில் பல இனத்தவர்களுக்கு இன்று குல தெய்வமாகவும், பொதுத் தெய்வமாகவும் வழிபடப் படுவதைக் காட்டலாம். இதே போன்று செல்லியம்மன் கொங்கு நாட்டில் பல இன மக்களால் குல தெய்வமாக வணங்கப்படுகிறது.

செல்லியம்மன் மிகப் பழங்காலத்திலிருந்தே வணங்கப்படும் பெண் தெய்வமாகும். வேட்டுவ இன மக்களால் வழிபடும் வேட்டைக்காரன் கோயில்களும் செங்குந்த வேளாளர்கள் வழிபடும் காமாட்சியம்மன் கோயில்களும், அகமுடையார் வழிபடும் தொட்டிச்சியம்மன், சிலம்பாத்தாள், எழுவக் காரியம்மன், பகவதியம்மன் கோயில்களும், தேவேந்திர குல வோளளர்கள் வழிபடும் கருப்பணசாமி, மாசானியம்மன், அடைக்கல அம்மன், கருப்பராயன், வீரமாத்தி, இராஜகுமாரியம்மன், மாகாளியம்மன், கரியம்மன் கோயில்களும் செட்டியார்கள் வழிபடும் அங்காளபரமேஸ்வரி, கொங்கு வேளாளக் கவுண்டர்கள் வழிபடும் நாட்டராயன், சின்னம்மாள், பெரியம்மாள், அண்ணன்மார்சுவாமி, கருப்பராயன் கோயில்களும் இன அடிப்படையில் பிரசித்தி பெற்று விளங்குவன ஆகும். இக்குல தெய்வங்களின் தோற்றம் வளர்ச்சி குறித்து சுருக்கமாகக் காண்போம்.

**வீரமாத்தி**

பெரும்பாலான பெண் குல தெய்வப் பெயர்களில் வீரமாத்தி எனும் பெயர் காணப்படுகின்றது. இத்தெய்வம் தனது கற்பைக் காக்கவும் அல்லது தனது கணவன் இறந்து பட்ட நிலையிலும் தீயில் விழுந்து உயிர் விட்டதாகக் காணப்படுகின்றது. இவ்வாறான வீரம் காட்டி இறந்துபட்ட தெய்வத்தை வீரமாத்தி என்று பெயரிட்டு வழிபட்டு வருவது ஒரு மரபாகக் கொங்கு நாட்டில் காணப்படுகின்றது. மேலும் 'கன்னிமார்' எனும் வளமைத் தெய்வத்தின் தாயாராகவும் வீரமாத்தி எனும் தெய்வத்தைக் கருதி கன்னிமார் கோயில்களில் வீரமாத்தி எனும் பெயரில் ஒரு சிலை வைத்து வழிபடும் மரபும் தேவேந்திர குல வேளாளர்களிடம் காணப்படுகின்றது. இத்தெய்வம் நஞ்சுண்டாபுரம், மசக்காளிபாளையம், இருகூர், இராமநாதபுரம், செட்டிபாளையம், பேரூர், குனியமுத்தூர் போன்ற ஊர்களில் வழிபடப்படுகின்றன. இத்தெய்வம் பற்றிய தோற்றக் கதைகளில் ஒன்று வருமாறு.

குனியமுத்தூரைச் சேர்ந்த பச்சயன்னப் பட்டக்காரரின் ஒரே பொண்ணு வீரமாத்தி என்பவள். இவளைப் பேரூரைச்

சேர்ந்த ஒரு பட்டக்காரரின் மகனுக்குத் திருமணம் செய்து வைக்கின்றனர். இவர்கள் இருவரும் ஒரு நாள் பேரூரை நோக்கிச் சென்று கொண்டிருந்த பொழுது மரத்தில் ஓய்வெடுக்கின்றனர். திடீரென கணவன் நோய்வாய்ப்பட்டு மரத்தடியில் இறந்து பட அதே இடத்தில் இப்பெண்ணும் தீப்பாய்ந்து இறந்து படுகின்றாள். ஆனால் அவள் கையிலிருந்து அரளிப்பூவும், எலுமிச்சப்பழம் வேகாமல் இருக்கின்றது. இதைக்கண்ட இவளின் வழிவந்தோர் இவள் தெய்வப் பிறவி என்றும் இவர் தெய்வமாகிவிட்டாள் என்றும் நம்பி கோயில் கட்டி வழிபட்டு வருகின்றனர். இத்தெய்வம் தேவேந்திர குல வேளாளரின் ஒரு பிரிவான கடையர் இனத்தின் குல தெய்வமாகும்.

## இராஜகுமாரி தெய்வம்

பழனிவட்டம் ஆயக்குடியில் வாழும் தேவேந்திர குல வேளாளரில் ஒரு பிரிவினர் வழிபடும் தெய்வம் இது ஆகும். ஆய் மன்னனின் வழிவந்த கடைசி அரசன் தனது மனைவியின் கற்பில் சந்தேகப்பட்டு வாளால் வெட்டி வீழ்த்தி விடுகின்றான். ராணி சாகும் போது என்னோடு இந்த இராஜவம்சம் அழிந்து போகும் என்று சாபமிட்டு இறந்து பட்டதாகவும் அதன் பின்னர் இந்த இராஜவம்சம் அந்நியரிடம் ஆட்சியைக் கொடுத்து வீழ்ந்து போனதாகவும் இச்சாபம் நீங்கவும் கற்பில் சிறந்த அந்த ராணியைப் போற்றவுமாக இப்பகுதியில் இத்தெய்வம் வழிபடப்பட்டு வருகின்றது. இத்தெய்வக்கதையின் மூலம் இத்தெய்வம் கொலையில் உதித்த தெய்வமாக அமைகின்றது.

## மாசாணியம்மன்

கொங்கு நாட்டில் எல்லாச் சமூக மக்களாலும் வழிபடப்படும் தெய்வம் மாசாணியம்மன் ஆகும். இதன் தலைமைத்தெய்வம் ஆனைமலையிலிருந்தாலும் வழிபடப் படும் இடம், வழிபடும் மக்கள் சார்ந்து இத்தெய்வத்தின் தோற்றக் கதைகள் அமைகின்றன.

கோவையில் தேவேந்திர குல வேளாளர்களின் குல தெய்வமாகச் சொக்கம்புதூரிலும் பூசாரிபாளையத்திலும் மாசாணியம்மன் கோயில் காணப்படுகின்றன. சொக்கம்

புதூரிலுள்ள மாசானியம்மன் கோயில் மிகப்பெரிய கோயிலாகும் இதனை எல்லா வகையிலும் இம்மக்களே நிர்வாகம் செய்து வருகின்றனர். இத்தெய்வம் குறித்த வரலாறு வருமாறு

"கோவை சொக்கம்புதூரில் மன்னரினத்தின் மருமகளாக வந்த 'மாசானி' தன் கணவனிடம் அளவிடற்கரிய அன்பு கொண்டு வாழ்ந்து வருகின்றாள். இதைக் கண்டு எரிச்சலுற்ற மாமியார் மருமகளைப் பல வழிகளிலும் துன்புறுத்துகின்றார் இதையெல்லாம் பொருட்படுத்தாமல் வாழ்ந்து வரும் 'மாசானி' கருவுருகின்றாள். கணவன் பொருள் தேட வெளியூர் செல்கின்றான். இதனைத் தனக்குச் சாதகமாக்கி மாசானியை வீட்டை விட்டு மாமியார் வெளியேற்றுகின்றாள். நிறைமாதக் கர்ப்பிணியான மாசானி வீட்டைவிட்டு வெளியேறி ஒரு சுடுகாட்டில் வந்து குழந்தைப் பேறு அடைய முடியாமல் இறந்துபடுகின்றாள். பின்பு ஒரு நாள் ஒரு பூசாரியின் கனவில் தோன்றி நான் தெய்வமாகி விட்டதாகச் சொல்ல அப்பெண் இறந்த சுடுகாட்டிலேயே (மயானம்) கோயில் அமைத்து 'மயானம்மன்' என்று வழிபட்டுவருகின்றனர். இதே கதையுடன் கொங்கு வேளாளர்கள் தம் இனப்பெண் என்ற பெயரிலும் அகமுடையார் தம் இனப்பெண் என்ற பெயரிலும் பல இடங்களில் கோயில் கட்டி வழிபட்டு வருவதைக் காணமுடியும் இம்மாசானியம்மன் ஒரு சிலரின் குல தெய்வமாகவும் அனைத்து இன மக்களும் வழிபடும் பொதுத் தெய்வமாகவும் வழிபடப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

ஆனைமலையிலுள்ள மாசானியம்மன் கோயிலை ஆய்வு செய்து 'மாசானியம்மன்' என்ற ஆய்வு நூலை வெளியிட்டுள்ள துளசி இராமசாமி இம்மாசானியம்மன் சங்க கால மன்னன் நன்னனால் கொலை செய்யப்பட்டவள். அதாவது நன்னனின் காவல் மரபான மாங்கனியைத் தின்றதால் கொலை செய்யப்பட்டதால் இப்பெண்ணுக்கு மாங்கனியம்மன் என்று பெயர் ஏற்பட்டு பின்பு மயானத்திலிருந்து தெய்வமாக மாறி மாசானியம்மனாக விளங்குகிறது என்றும் ஆனை மலையிலுள்ள இக்கோயிலை கொங்கு வேளாளர் இனத்தவர் வழிபடுவதால் நன்னன் கொலை புரிந்த பெண்ணும் கொங்கு வேளாளர் தான்

நன்னனும் கொங்கு வேளாளர் தான் என்ற முடிவுக்கு வருகின்றார்.[5] இவ் ஆய்வுக்கு இத்தெய்வத்தை பெரிய கோயிலெழுப்பி வழிபட்டு வரும் மள்ளரெனும் தேவேந்திர குல வேளாளரின் சொக்கம்புதூர் மாசானியம்மன் கோயிலை இவர் கணக்கிலெடுத்துக் கொள்ளாதது ஏனென்று தெரியவில்லை.

**பல்லக்குக் காளியம்மன்**

இத்தெய்வம் உடுமலை வட்டாரம் கவுண்டர்களின் ஒரு பிரிவினராகிய வெண்ணகுலம் வழிபடும் குல தெய்வமாகும். இத்தெய்வத் தோற்றக்கதை வருமாறு. முன்னொரு காலத்தில் காளியைப் பல்லக்கில் வைத்துக் கொண்டு ஊர்விட்டு ஊர் வந்ததாகவும் அப்படி வரும் போது இளைப்பாற பொட்டிப் பாளையம் பகுதியில் பல்லக்கை இறக்கி வைத்துவிட்டு பின்பு எடுக்க முடியாத நிலை ஏற்பட்ட போது அச்சாமியை அங்கேயே வைத்து பல்லக்குக் காளியம்மன் என்று பெயரிட்டு வழிபட்டு வருவதாகவும் சொல்லப்படுகின்றது.

**முதலிக்கவுண்டர் கோயில்**

கொங்கு நாட்டில் வேட்டுக் கவுண்டர்களுக்கும் வேளாளக் கவுண்டர்களுக்கும் நடந்த போரில் மாண்டு போன அண்ணன்மார் சுவாமிகள் போன்றே வேளாளர் குடியில் தோன்றிய முதலிக்கவுண்டரும் வேட்டுவருடன் நடந்த போரில் இறந்துபட்ட வீரர் ஆவார். இவரின் வீரத்தைப் பாராட்டி கற்சிலை நாட்டி வழிபட்டு வந்தனர். இது இன்று பிரசித்தி பெற்று முதலிக்கவுண்டர் கோயிலாக' வளர்ச்சி பெற்றுள்ளது.[6]

**மதுரை வீரன் வழிபாடு**

கொங்கு நாட்டிலுள் அருந்ததியர் இன மக்கள் இத்தெய்வத்தைக் குலதெய்வமாக வழிபடுகின்றனர். மதுரை நாயக்கர் ஆட்சியில் படைத்தளபதியாக விளங்கிய அருந்ததிய இனத்தைச் சார்ந்த மதுரை வீரன் மதுரைப் பகுதியில் கள்ளர்களின் திருட்டை ஒழித்தான். பின்பு நாயக்க மன்னனின் மகளை விரும்பினான் இதனால் மாறுகால் மாறுகை வாங்கப்பட்டுக் கொலை செய்யப்பட்டான். இவனைப் போற்றும் வீர வழிபாடே மதுரை வீரன்சாமி வழிபாடு ஆகும். இதுவும்

இறந்த பட்ட மனித வழிபாடே என்பது இங்கு கருதத்தக்கது.

**வேட்டைக்காரன் சாமி**

கொங்கு நாட்டில் வேட்டுக்கவுண்டர்கள் தங்கள் இனத்து முன்னோரை வழிபடும் வேட்டைக்காரன் கோயிலைப் பெரிதும் காணலாம். இது ராஜாக்கள் கோயில் என்றும் அழைக்கப்பெறும்.

**பொம்மக்கா, மாசக்கா**

கொங்கு நாட்டிலுள்ள நாயக்கரின் குல தெய்வங்களாக பொம்மக்கா, மாசக்கா முதலிய தெய்வங்கள் காணப்படுகின்றன. மேலும் இம்மக்கள் வழிபடும் தொட்டிச்சியம்மன் பிரசித்தி பெற்றது. இத்தெய்வங்கள் அனைத்தும் இறந்துபட்ட பெண்களின் நினைவாக வழிபடப்படுவதாகும்

இவ்வகையில் கொங்கு நாட்டில்காணப்படும் குல தெய்வ வழிபாடு இறந்துபட்ட வீரர்களின் வழிபாடாகவும், பத்தினிப் பெண்களின் வீர வழிபாடாகவும் அமைந்து காணப்படுவதைக் காணமுடிகின்றது.

**3. ஊர்ப் பொதுத் தெய்வம்**

ஒரு கிராமம் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிராமத்தில் வாழும் அனைத்துச் சாதியினரும் ஒன்று சேர்ந்து வழிபடும் தெய்வம் ஊர்ப் பொதுத் தெய்வம் ஆகும். இத்தெய்வங்கள் ஓர் ஊருக்கு மட்டுமானதாகவும் ஓர் சாதிக்கு மட்டுமானதாகவும் இருக்கும். இத்தெய்வத்தை ஊர்ச்சாமி, கிராம தெய்வம் என்றெல்லாம் அழைப்பர். கொங்கு நாட்டில் எல்லா ஊர்களிலும் அம்மன் தெய்வங்களே மாரியம்மன், காளியம்மன், மாகாளியம்மன், அங்காளம்மன், பேச்சியம்மன், பத்ரகாளியம்மன், மாசானியம்மன், காமாட்சியம்மன், கோட்டை மாரியம்மன், முத்து மாரியம்மன், தண்டு மாரியம்மன், சூலக்கல் மாரியம்மன், வனபத்திரகாளியம்மன் என்றவாறு ஊர்ப் பொதுத் தெய்வங்களாக அமைகின்றன. மாரியம்மன் அம்மை காலரா போன்ற நோய்களிலிருந்து மக்களைக் காப்பவளாகக் கருதப்படுகின்றன. மேலும் மாரி என்னும் சொல்லே 'மழையைக்'

குறிப்பதாகும். மழையையே இம்மக்கள் மாரியம்மன் என்று கொண்டு வழிபட்டு வருகின்றனர் என்றும் கருதலாம். கொங்கு நாட்டில் இருக்கும் மாரியம்மன் கோயில்களில் பொள்ளாச்சி பிளேக் மாரியம்மன், குடலுருவி மாரியம்மன் கோயில்கள் வித்தியாசமாக நோயுடன் தொடர்புடையதாகக் காணப்படு கின்றன. மாரியம்மனே காளியம்மனாகவும் கருதப்படுகின்றாள். இதனை தேவநேயப் பாவாணர் வருமாறு குறிப்பிடுவார்.

"பாலை நிலத்திற்குரிய வேனிற் காலத்திற் காணுங் கொப்புள நோய், அம்மையாகிய காளியின் சினத்தால் நேர்வதென்று, அதற்கு 'அம்மை' நோய் என்றே பெயரிட்டனர். அம்மை நோய் மக்களெல்லார்க்கும் பொதுவாதலால், அதை நீக்குமாறு காளி வணக்கம் நாளடைவில் நானிலத்திற்கும் பொதுவாயிற்று; ஊர் தோறும் காளி கோயில் தோன்றிற்று.[9] தமிழரிடமிருந்து தோன்றிய மிகப்பழைய, மிகப்பெரிய வழிபாடு மாரி வழிபாடே ஆகும். மனித இனத்தின் தலைமை வழிபாடான 'தாய்த் தெய்வ வழிபாட்டின் தமிழக வடிவமே மாரி அல்லது அம்மன் வழிபாடாகும். இம்மாரி வழிபாடு பொது மக்கள் வழிபாடாக (Folk Worship)க் காணப்படுவதைப் பார்க்க முடியும்.

## அம்மன் தெய்வங்கள்

கொங்கு நாட்டில் சேலம் மாவட்டத்தில் மட்டும் 2899 அம்மன் கோயில்கள் உள்ளன. இது மற்றெல்லாக் கோயில்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் மிகக் கூடுதலானவை ஆகும்.[7] கோவை மாவட்டத்திலும் ஈரோடு மாவட்டத்திலும் ஊர்தோறும் அம்மன் கோயில்கள் காணப்படுகின்றன. அம்மன் தெய்வங்கள் மாரியம்மன், பகவதியம்மன், பேச்சியம்மன், மாகாளியம்மன், காளியம்மன் என்று பல்வேறு பெயர்களின் அழைக்கப்பட்டாலும் மாரியம்மன் மழையுடன் தொடர்புடைய தெய்வமாகவும் பேச்சியம்மன், மாகாளியம்மன், காளியம்மன் போன்றன சக்தியுடன் தொடர்புடைய தெய்வமாகவும் கருதப்படுகின்றன. பெண் தெய்வங்கள் சக்தியின் கூறுகளாகக் கருதப்படுவதால் அவை சிவனின் மனைவியராக எண்ணப்படுகின்றன. "தேவியரில் பல வேதக் கடவுளரோடு இணைப்புப் பெற்றுவிட்டது. காளி

தனியாகவே வணங்கப்பட்டது சைவ சமயத்தில் பார்வதியோடு சேர்ந்து ஒரு அம்சமாகிவிட்டது. பெரும்பாலும் பழமையான தேவதைகள் சிவனது மனைவிகளாக மாறிவிட்டன"[8] இக்கூற்றுப்படி அம்மன் தோற்றக் கதைகளில் பல வித்தியாசமான மாற்று வடிவங்களைக் காணமுடியும். அவைகளில் சில வருமாறு.

**மாரியம்மன்**

ஜமதக்கினி முனிவரின் மனைவியான ரேணுகாதேவி கார்த்தவீர்யார்ச்சுனனின் அழகில் சற்று மயங்கின காரணத்தால், எப்போதும் போல் மணலால் குடம் செய்து தண்ணீர் கொண்டுவரை இயலவில்லை. எனவே அவளது கணவனது ஆணையின்படி மகனான பரசுராமனால் தலை துண்டிக்கப் பட்டாள்." இதைக்தடுக்க முயன்ற வண்ணாத்தி ஒருத்தியும் தலை துண்டிக்கப்பட்டாள். பின் அவர்கள் இருவரையும் உயிர் பிழைப்பித்த பரசுராமன் இருவரின் தலைகளையும் உடல்களையும் மாற்றி வைத்து விட்டார். ரேணுகா தேவியின் தலையும், வண்ணாத்தியின் உடலும் கொண்ட வடிவம் தான் மாரியம்மன் எனப்படுகிறது. இங்கு இயற்கைத் தெய்வமான மாரி வழிபாட்டிற்கு மனிதத் தோற்றக் கற்பனை செய்த விதமாக இக்கதை புனையப்பட்டிருப்பதைக் காணலாம். ஆனால் கிராமங்களில் இயற்கையின் வடிவாகவே மாரியம்மன்கள் எழுந்தருளியிருப்பதாகக் கருதப்படுகின்றன. காட்டாகக் கோவை மாவட்டம் கிணத்துக்கடவுக்குத் தென்மேற்கே 8 கி.மீ தொலைவில் உள்ள சூலக்கல் மாரியம்மன் கோயில் வரலாறு இயற்கையில் இக்கோயில் தோன்றியதாகத் தெரிகிறது. காட்டிற்குள் முக்கால் அடிகல்லும், ஒரு சூலாயுதமும் இயற்கையாகத் தோன்றியதாம் இதனை ஒரு பசுமாடு பால் சொரிந்து காட்டிக் கொடுக்க சூலக்கல் மாரியம்மன் என்று அப்பகுதி மக்கள் பெயரிட்டு வழிபட்டு வருகின்றனர்.

கோவை நகர மக்களிடையே காணப்படும் அம்மன்கள் பற்றிய கதை வருமாறு. "மைசூர் நாட்டிலிருந்து மக்கள் இங்கே வந்து குடியேறினர். அங்கிருந்து வரும் போது சாமுண்டீஸ்வரியை மட்டும் அங்கேயே விட்டு விட்டு அவளது சகோதரிகளான எண்மரையும் அழைத்து வந்துவிட்டனர் அவர்களே இன்று

கோவையில் பல பெயர்கள் பெற்ற அம்மன்களாகப் போற்றப்படுகின்றனர். அவர்களில் மூத்தவள் கோனியம்மன் ஆகும். இங்ஙனமின்றி கோனியம்மன் கிரீடத்தில் இருந்த நவரத்தினங்கள் சிதறி இவ்வாறு பல்வேறு அம்மன்களாக உருவெடுத்தனர் என்றும் கூறப்படுகின்றது.[9] அம்மன் சாமி ஆடுவோர் 7 பேர் 9 பேர் என்று சொல்வதும் இக்கதைகளின் அடிப்படையில் தான். இதே 7 அம்மன்கதை ஈரோடு கோபி வட்டம் பாரியூரில் வழிபடப்படும் குண்டத்துக் காளியின் வரலாறு மள்ளர் குல மக்களுடன் தொடர்புபடுத்திப் பேசப்படுவதைக் காணலாம். காஞ்சி கோயில் நாட்டில் காணியாளர்களாகிய பண்ணாடிமார்களில் (மள்ளர்) ஒருவருக்கு மனைவியான காளி ஏழு சகோதரர்களில் ஒருவர். அந்த ஏழு சகோதரர்கள் வருமாறு.

1. செலம்பூர் அம்மன்
2. அந்தியூர் பத்திரகாளியம்மன்
3. பாரியூர் குண்டத்துக்காளி
4. மொடச்சியூர் அம்மன்
5. திங்களூர் அம்மன்
6. ஆதியூர் அம்மன்
7. அளுக்குளி அம்மன்

பாரியூர்க் காளியின் கணவர் மள்ளர் தன் நெல் வயற்காட்டில் காளியிடம் அதிக வேலைகள் வாங்கியும், வீட்டில் அதிகாரங்கள் செய்தும் மிரட்டி கொடுமைப்படுத்தி வந்தார்.

ஒரு சமயம் திங்களூர் திருவிழாவிற்கு அழைப்பதற்காகத் திங்களூர் அம்மன் அக்காள் வீடாகிய பாரியூர் காளியின் வீட்டிற்கு வந்தார். அப்போது பாரியூர்க் காளி தனது தங்கையிடம் "நான் இங்கு பண்ணாடியிடம் படாதபாடுபட்டுக் கொண்டிருக்கின்றேன். வயற்காட்டில் சேறு அடித்து விட்டு இன்றும் சிறிது நேரத்தில் இங்கு வருவார். வெந்நீர் தயாராக இருக்கிறது. பண்ணாடியின் தோற்றமும் கர்ச்சனையும் பார்த்து நான் தினம் தினம் அல்லல்பட்டுக் கொண்டிருக்கின்றேன். இந்நிலையில் திங்களூர்த் திருவிழாவிற்கு நான் வரமுடியாது" என்று கண்ணீர் வடித்தாள்.

இதைக்கேட்ட திங்களூர் அம்மன் இந்தக் கொடுமைகளுக்கு ஒரு முடிவுகட்டுகிறேன் என்று சூளாயுதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வடக்கு வாசல் கதவை ஒரு புறம் சாத்தி வைத்து தன்னுடைய சக்தியை எல்லாம் வரவழைத்து ஒளிந்திருந்தாள். அப்போது பெரும் கர்ச்சனையோடு வடக்கு வாசல் வழியே வயலிலிருந்து வந்த மள்ளரை (பண்ணாடியை) சூளாயுதத்தில் குத்தினாள். சூளாயுதத்தால் குத்திய பிறகு குத்திய வேகத்தில் கிழக்குப் பக்க வாசல் வழியாக வெளியேறி திங்களூர் வந்தடைந்து கர்ப்பகிரகத்திற்குள் சென்று உள் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள்.

உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த மள்ளரைப் பாரியூர்க் காளி வந்து பார்த்து அழுத போது "அடி காளி எனக்குத்தான் முதல் பூசை செய்ய வேண்டும்" என்று கூறி பண்ணாடி உயிர் விட்டார். மள்ளரை (பண்ணாடியை) அடக்கம் செய்த இடம் பாரியூர்க் கோயில் நந்தவனத்தில் "மள்ளர் சமாதி" என்றும் 'சூரசித்தன் சமாதி' என்றும் "பட்டாரி கோயில்" என்றும் வழிபடப்படுகிறது. இந்த மள்ளர் கோயில் இன்றளவும் இம்மக்களாலே வழிபடப்பட்டு வருகின்றது என்பதும் குறிப்பிடத்தக்கது. பாரியூரில் சாம்பல்மேடு (தற்போது பெருமாள் கோயில் உள்ள இடம்) என்ற இடத்தில் இருந்த மள்ளர்கள் காளிக்குக் கோயில் எழுப்பி திருவிழாவாகக் கொண்டாடி வந்தனர். சுமார் 250 ஆண்டுகளுக்கு முன் மைசூர் மன்னர்கள் படையெடுத்து வந்த போது கோயில் சிலைகளைப் புதைத்து வைத்து விட்டு சவண்டப்பூர் கணபதிபாளையத்திலும் ஈரோடு தொட்டம்பட்டியிலும் குடியேறினர்.[10]

இக்கதையிலிருந்தும் மள்ளர் சமாதிக்கு தினம் தோறும் காளிக்குப் பூசை செய்வதற்கு முன்னால் பூசை செய்வதிலிருந்தும் குண்டம் திறக்கும் விழாவை மள்ளர்களே நடத்துவதிலிருந்தும் இக்கோயிலுக்கும் இம்மக்களுக்கும் இருக்கும் உறவு நிலை தெரிய வரும். இக்கோயில் வழிபாட்டு முறைகளையும் கோயிலையும் ஆய்வு செய்த கோவை அரசு அருங்காட்சியகக் காப்பாளர் டாக்டர் சி. மகேசுவரன் அவர்கள் பின்வருமாறான முடிவுக்கு வருகிறார்.

"மேம்போக்காகப் பார்க்கும் போது சமாதிக் கோயிலாக மட்டும் தோன்றும் 'சூரசித்தன் சமாதி' எனும் 'பட்டாரிகோயில்' மள்ளரின மக்களால் வழிபடப்படுதலுடன் பாரியூர் குண்டத்துக் காளி கோயில் தொடர்பான குண்டத் திருவிழாவையொட்டிக் கடைப்பிடிக்கப்படும் பல்வேறு சடங்குகளிலும் மள்ளரின மக்களுக்குள்ள மரியாதை, உரிமை, காளியை மள்ளராகத் தற்காலிகமாக உருமாற்றிக் குதிரை உருமீது அமர்த்தி வழிபடுதல், மள்ளரின மக்களது கருவிகளான மண்வெட்டி முதலியன கொண்ட கூடையைப் 'படைக்கலக் கூடை' என அழைத்தல், குதிரையைச் சடங்கு நிகழ்வுகளில் பங்கு கொள்ளச் செய்தல், சூரசித்தன் சமாதியைச் 'சீர ராஜன் சித்தன் சமாதி' என்ற பெயராலும் அழைத்தல், பள்ளயமிடும் 'அன்னப் பாறை" (அதாவது பலிசோற்றுருண்டையிடும் பாறை) கோயிலின் நேரெதிரே அமையாது சற்றுத் தள்ளி ஒதுக்குப் புறமாக மள்ளர் சமாதியையொட்டி அமைந்திருத்தல், மேற்படிச் சமாதிக் கோயினுள் இரு கருங்கற்கள் புதைக்கப்பட்டு வழிபடப்படுதல், சமாதிக் கோயிலுக்குச் சற்றுத் தள்ளி அமைந்துள்ள ஒரு கல் 'பத்தினிக்கல்' என இன்றும் ஊராரால் அழைக்கப்படுதல் உள்ளிட்ட பல்வேறு பண்பாட்டு மரபெச்சங்கள் பாரியூர் குண்டத்துக் காளியம்மன் திருக்கோயில் ஒரு காலத்தில் மள்ளரின மக்களுக்கே முழு உரிமையாக இருந்தமையை அறுதியிட்டுக் கூறலாம்"[11].

இங்கு கூறப்பட்ட பாரியூர் அம்மன் கதை மனித வரலாற்றுடன் தொடர்புபடுத்தப்படுவதைக் காணமுடியும். இருப்பினும் அம்மன் தெய்வங்களை மேற்கண்டவாறு ஏழு அம்மன்கள் என்று குறிப்பிடுவது தமிழகத்தில் பொதுவான மரபாகும். இதனடிப்படையிலேயே கொங்கு நாட்டிலும் அம்மன் தெய்வங்களை ஏழு பேர் என்று வழங்கி வருவது காணப்படுகின்றன. இவ்வகையில் கொங்கு நாட்டில் அம்மன் தெய்வங்கள் பெரும்பாலான கிராமங்களில் ஊர்ப் பொதுப் தெய்வமாக வழிபடப்பட்டு வருகின்றன. இவ் அம்மன் தெய்வங்கள் தவிர கருப்பராயன், கருப்பணசாமி, அய்யனார், கன்னிமார், அண்ணன்மார் சுவாமி, வேட்டைக்காரன் சாமி,

மதுரைவீரன், முனியப்பன் போன்ற தெய்வங்களும் ஊர்ப் பொதுத் தெய்வமாக வழிபடப்படுவதைக் காணலாம்.

### 4. காவல் தெய்வம்

தெய்வ வகைகளில் காவல் தெய்வம் என்பதும் ஒரு வகையினதாகும். இக்காவல் தெய்வங்களில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று தலைமைத் தெய்வத்திற்குக் காவலாக இருப்பது. மற்றொன்று ஊரினையும் வேளாண் நிலங்களையும், குளங் களையும், நீர் நிலைகளையும் காவல் காப்பது ஆகும். பண்டைக் காலத்தில் "ஒவ்வொரு தீவிற்கும் ஊருக்கும் ஒரு காவல் தெய்வம் இருந்தது. நாவலந்தீவிற்குச் 'சம்பாபதி' என்னும் நாவல் மகளும், மதுரைக்கு மதுராபதியும் காவல் தெய்வம். அரசர் சிலர் ஒவ்வொரு பூதத்தைத் தமக்குக் காவல் செய்ய அமர்த்தியிருந்தனர். முசுகுந்தச் சோழன் காவற் பூதற்படிமை, புகார் நடுச்சதுக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. முனியன் என்பது காவற் பூதங்களுள் ஒன்று. எல்லம்மன், எல்லைக் கருப்பன் என்பன சிற்றூர் காவல் தெய்வங்கள்"[12]

கொங்கு நாட்டில் ஏரி, குளங்கள், வயல்கள் இவற்றிக்குக் காவல் தெய்வங்களாக ஐய்யனார் தெய்வங்கள் இருப்பதைக் காணலாம். வயல்களில் கன்னிமார் எனும் தெய்வம் காவல் தெய்வங்களாக இருக்கின்றன. தேவேந்திர குல வேளாளர் வயல்களின் காவல் தெய்வமாக மல்லாண்டை எனும் தெய்வத்தை வழிபடுகின்றனர். இத்தெய்வம் வயல்களில் உறைந்து வயல்களின் வளமைக்குத் துணைபுரிவதாக இம்மக்கள் நம்புகின்றனர். பெரும்பாலான கொங்கு நாட்டு ஊர்களில் நாட்ராயன், கருப்பராயன், அய்யனார் போன்ற தெய்வங்கள் ஊரைக் காப்பதாக நம்பப்படுகிறது. திருட்டு, நோய், பேய், பூதங்கள், புயற்காற்று, வெள்ளம் முதலிய இயற்கையின் சீற்றங்களிலிருந்து ஊரைக் காப்பதும் இத்தெய்வமே என்றும் குழந்தை இல்லாதவருக்குக் குழந்தைப்பேறு இத்தெய்வத்தின் அருளால் கிடைக்கும் என்றும் மக்கள் நம்புகின்றனர். மேலும் தீராத நோய்களைத் தீர்ப்பதும், செல்வச் செழிப்பை வழங்குவதும் இத்தேவதையே எனக் கிராம மக்கள் நம்புகின்றனர்.

கொங்கு நாட்டில் முனியப்பன் கோயில் தலைமைத் தெய்வத்தின் காவல் தெய்வக் கோயிலாகக் கருதப்படுகின்றது. காட்டாகப் பாரியூர் அம்மன் கோயிலில் இடம் பெற்றுள்ள முனீஸ்வரர் கோயிலைச் சொல்லலாம். பெரும்பாலான கருப்பராயன் கோயில்களில் பரிவாரத் தெய்வங்களாக அதாவது காவல் தெய்வங்களாக முனிகளே இருக்கின்றன. கொடிவேரி அணை உடையாமல் காப்பது அணை முனியப்பன் என்று நம்பப்படுகிறது. இவ்வாறு காவல் தெய்வங்களாக அமைந்துள்ள முனிகளின் சிலைகள் பெரிய உயரமான அளவில் அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

மாரியம்மன் சில இடங்களில் ஊரின் எல்லை காக்கும் அம்மனாக வணங்கப்படுகிறது. காட்டாக 'மாதே ராஜா' என்று மைசூர் அரசன் காலத்தில் கோயம்புத்தூருக்குக் காப்புத் தெய்வமாகக் கோனியம்மனை வைத்து வணங்கி வந்தான் என்று அறியமுடிகின்றது"[13] இதனை ஊர்க்காவல் தெய்வம் என்றும் சொல்லலாம். "ஊரைப் பாதுகாப்பதே கிராம தேவதைகளின் தொழில்"[14] என்பார் ஹென்றி ஒயிட் ஹெட். "நோய், தீ போன்ற துன்பங்களிலிருந்து கிராமத்தைப் பாதுகாக்கும், இறந்தவர்களின் ஆவியே கிராம தேவதை என்பார் மகான்ஷா. இதினின்று மக்களையும், ஊரினையும்,[15] குளங்களையும், பயிர்களையும் பாதுகாப்பதே கிராம தேவதைகளின் பணியாக அமைவதைக் காணலாம்.

## தொகுப்புரை

1. கொங்கு நாட்டில் வழிபடப்படும் நாட்டுப்புறத் தெய்வங்களை அது வழிபடப்படும் நோக்கில் குடும்ப தெய்வம், குல தெய்வம், ஊர்ப் பொதுத் தெய்வம், காவல் தெய்வம் என்றவாறு நான்கு வகைப்படுத்தலாம்.

2. இறந்து பட்ட குல முன்னோர்களையும், கன்னிப் பெண்களையும் குடும்ப தெய்வமாகக் கருதி வழிபடும் மரபு பெரிதும் காணப்படுகின்றன.

3. குடும்ப தெய்வம் வளர்ச்சி பெற்று குல தெய்வ நிலைக்கு உயர்ந்துள்ளதையும் இவ்வியல் கண்டறிந்து சொல்லியுள்ளது.

4. ஒரு குல தெய்வத்தை வழிபடுபவர்கள் ஒரு மூதாதையரின் வழிவந்த சகோதர முறையினர் என்ற கருத்து வலிமையாகக் காணப்படுகின்றது. இவ்வகையில் வழிபடப்படும் குல தெய்வங்களில் இறந்து பட்ட வீரர்களின் வீர வழிபாடும், பத்தினிப் பெண்களின் வீர வழிபாடும் சிறப்பிடம் பெறுகின்றன.

5. ஒரு கிராமம் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிராமங்களில் வாழும் அனைத்துச் சமூக மக்களும் சேர்ந்து வழிபடும் தெய்வம் ஊர்ப் பொதுத் தெய்வம் என்று பெயர் பெறுகின்றது. ஊர்ப் பொதுத் தெய்வங்களில் அம்மன் தெய்வங்களே பேரிடம் பெறகின்றன.

6. ஊரைக் காக்கவும், ஏரி, குளங்கள், வயல்களைக் காக்கவும் என்றவாறு முனியப்பன், நாட்ராயன், கன்னிமார் போன்ற காவல் தெய்வங்களை வழிபடும் மரபு கொங்கு நாட்டில் காணப்படு கின்றன.

## குறிப்புகள்

1. துளசி இராமசாமி, நெல்லை மாவட்ட நாட்டுப் புறத் தெய்வங்கள் ப. 158
2. சக்திவேல், சு. நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 212
3. தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், ப. 37
4. துளசி இராமசாமி, மு.கா.ப. ப73
5. துளசி இராமசாமி, மாசாணியம்மன், பக். 70-71
6. முதலிக்கவுண்டர் கோயில் வரலாற்றுச் சிறப்பு மலர், பக். 10-11

7. Census of India 1961, Fairs and Festivals, Vol. IX
8. வானமாமலை, நா. தமிழர் வரலாறும் பண்பாடும், ப.145
9. நீலாவதி, ப. முகாப, ப.41
10. பாரியூர் அருள்மிகு குண்டத்துக் காளியம்மன் 1999 ஆம் ஆண்டுத் திருவிழா அழைப்பிதழ்
11. மகேசுவரன், சி. பாரியூர் சூரசித்தன் (மள்ளர்) சமாதிக் கோவில் வாயிலாக அறியலாகும் மள்ளர் இனக்குழு வரலாறு, மள்ளர் மலர், ஏப்ரல் 1999 பக்.12-13
12. தேவநேயப் பாவாணர், முகாப. ப.38.
13. நீலாவதி, பா. முகாப. ப.81.
14. Henry White Head, The Village Gods of South India, P. 30.
15. Ibid, P.28.

# 3. வழிபாட்டு முறைகள்

நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு முறைகள் ஒவ்வொரு ஊருக்கும் ஒவ்வொரு மாதிரியாக அமைந்தாலும் பெரும்பாலான வழிபாட்டு முறைகள் ஒரே மாதிரியாகவே காணப்படுகின்றன இவ்வழிபாட்டு முறைகளைக் குல தெய்வ வழிபாட்டு முறைகள், ஊர்ப் பொதுத் தெய்வ வழிபாட்டு முறைகள் என்றவாறு இவ்வியல் முறைப்படுத்தி விளக்குகின்றது.

## குல தெய்வ வழிபாட்டு முறைகள்

குல தெய்வ வழிபாடு ஆண்டுக்கு ஒரு முறையோ அல்லது இரண்டாண்டுகளுக்கு ஒரு முறையோ நிகழும் பெரும்பாலும் எல்லாக் குல தெய்வ வழிபாடுகளும் ஆடி, ஆணி மாதங்களில் வழிபடப்படுகின்றன. எல்லாக் குலத் தெய்வக் கோயில்களிலும் உயிர்ப்பலியிடல் இடம் பெறுகின்றன. கிராம மக்கள் தங்களின் பிறப்பு முதல் இறப்பு வரை எல்லா விதமான சடங்குகளையும் குல தெய்வங்களுடன் தொடர்புபடுத்தியே செய்கின்றனர். திருமணத்திற்கு இசைவு பெறுவதற்காகச் செய்யப்படும் பூக்கேட்டல், முதல் குழந்தைக்குப் பெயர் வைப்பது மொட்டையடிப்பது, காது குத்துவது என்றவாறு அனைத்தும் குல தெய்வத்துடன் தொடர்புபடுத்தியே நடைபெறுகின்றன. இந்த நாளில்தான் குல தெய்வத்தை வழிபட வேண்டுமென்ற நியதியெல்லாம் இங்கில்லை. தாங்கள் விரும்பியது வேண்டியது நடந்துவிட்டால் உடனே பொங்கல் வைத்து கிடாய் வெட்டி குல தெய்வத்தை வழிபடுவது வழக்கமாகும். ஒரு சில குல தெய்வ கோயில்களின் தொடக்கம் கொடி ஏற்றுதல் தொடங்கி கரகம் எடுத்தல், குண்டம் இறங்குதல், பொங்கல் வைத்தல், பலியிடுதல், சாமியாடுதல், மஞ்சள் நீராட்டு என்று தொடர்ந்து பல சடங்குகளால் வழிபாடுகள் அமைகின்றன. பொதுவாக எல்லாக் குல தெய்வக் கோயில்களிலும் சாமியாடுதல் இடம் பெறுகின்றது. திரௌபதியம்மன் வழிபாட்டில் குண்டம் இறங்குதல் சிறப்பான

வழிபாடாக அமைகின்றது. சில குல தெய்வக் கோயில்களில் பேயோட்டுதல், சாமி கேட்டல் போன்றன வழிபாட்டோடு இணைத்துச் செய்யப்படுகின்றன.

அங்காளம்மன், மாசானியம்மன் வழிபாட்டில் இரவு 12 மணிக்கு மேல் சுடுகாட்டில் நடைபெறும் மயான வழிபாடு பழஞ்சமயக் கூறினை உடையதாகும். குல தெய்வக் கோயில்களில் நேர்த்திக் கடனாக மொட்டையடித்தல், தொட்டில் கட்டிப் போடுதல், உருவாரம் செய்து வைத்தல், வேல் அடித்து வைத்தல், அரிவாள் அடித்து வைத்தல் வேளாண் பொருட்களைக் காணிக்கையாக்குதல் போன்றனவும் இடம் பெறுகின்றன. இவ்வாறு பல்வேறு வகைகளில் வழிபடப்படும் குல தெய்வ வழிபாட்டு முறைகளில் சிலவற்றை வருமாறு சுருக்கமாகக் காணலாம்.

**பலியிடுதல்**

குல தெய்வக் கோயில்களிலும், ஊர்ப் பொதுத் தெய்வக் கோயில்களிலும் உயிர்ப் பலியிடல் தவறாது இடம் பெறுகின்றன. அண்மைக் காலத்தில் பிரசித்திபெற்ற அம்மன் கோயில்களில் உயிர்ப்பலிகள் நிறுத்தப்பட்டுள்ளன. பொதுவாக ஆடு, கோழி, பன்றி, எருமை போன்ற விலங்குகளைப் பலியிடுதலையே உயிர்ப்பலி என்று சொல்லப்படுகின்றது. ஆனால் முற்காலத்தில் மனிதனைப் பலிகொடுக்கும் நரபலி முறையும் வழக்கிலிருந்திருக் கின்றது. இதனை நவகண்டம் கொடுத்தல் என்று சொல்கின்றனர். மக்கள் தாங்கள் வேண்டியது நடக்க தங்கள் தலைகளைத் தாங்களே அறிந்து கொள்ளுதல் நவகண்டம் கொடுத்தல் என்றும் சவாராப் பலி என்றும் கூறப்படுகிறது. "கொங்கு நாட்டில் நல்ல புள்ளியம்மன் கோவிலில் நல்லயன் என்பவன் தன் தலைவனான காங்கேயனுக்குக் குழந்தை வேண்டி தன்னைப் பலி கொடுத்துக் கொண்டதாக மோரூர் காங்கேயர் ஏட்டில் குறிப்பிடப் பட்டிருப்பதாகத் தெரிகிறது"[1] "இத்தகைய நவகண்டச் சிற்பம் அவிநாசிக் கோயில் மகா மண்டபத்திற்கு முன் உள்ள மண்டபத்தூண் ஒன்றில் உள்ளது. இச்சிற்பத்தில் காணும் வீரன் இடது கையால் தன் முடியைப் பிடித்துக் கொண்டு, வலது கையில் ஏந்தியுள்ள வாளால் தன் கழுத்தைத் தானே அரிந்து

கொள்கிறான்"[2]. இச்சிற்பம் கொங்கு நாட்டில் நரபலி இருந்ததை உறுதி செய்யும். இன்னும் ஒரு சில இடங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நரபலியிடுதல் இருந்தாலும் நரபலியிடுதல் இன்று இல்லை. இதற்குமாறாக விலங்குகளைப் பலியிடும் முறையே பெரிதும் வழக்கிலிருக்கின்றன. இப்பலியிடுதல் முறையில் பல்வேறு முறைகள் காணப்படுகின்றன. அவற்றை வருமாறு காணலாம்.

## பலியிடும் முறைகள்

பொதுவாக எல்லாக் குல தெய்வக் கோயில்களிலும் ஆட்டுக் கிடாய்களையே பெரிதும் உயிர்பலியாகக் கொடுக்கின்றனர். ஈரோடு மாவட்டத்திலுள்ள பட்டலூர் செம்முனீஸ்வரர் கோயிலில் ஆயிரக்கணக்கில் ஆடுகள் பலியிடப்படுவதனைக் காணமுடிகின்றது. பொதுவாக ஆடுகளை ஒரே வெட்டாக வெட்டி விடுவதே வழக்கம். ஒரு சில கோயில்களில் உச்சிக் கரும்பு குடித்தல் எனும் பெயரில் கிடாயினை வெட்டி அதன் இரத்தத்தைப் பூசாரிகள் உறிஞ்சிக் குடித்துவிடுகின்றனர். சில கோயில்களில் பரண்களில் ஆடுகளைப் பலியிட்டு அவற்றின் இறைச்சியைப் பச்சையாக உண்பதும் உண்டு. இதனைப் பரணக்கிடாய் வெட்டுதல் என்கின்றனர். கோழிகள் பலியிடப்பட்டு படைக்கப்படுவதற்கு அடசல் பூசை என்று பெயர். கருப்பராயன் கோயில் வழிபாட்டில் ஆட்டின் ஈரலைச் சுட்டுப் படைக்கின்றனர். இதற்குச் சுடுவான் போடுதல் என்கின்றனர். உடுமலை வட்டாரத்தில் அங்காளம்மன் கோயில் வழிபாட்டில் மூன்று மாதம் கருவுற்ற ஆட்டின் வயிற்றைக் கிழித்து கருவை எடுத்து பூசை செய்கின்றனர். இச்சமயம் வயிறு கிழிக்கப்பட்ட ஆடு கோயிலை மூன்று முறை சுற்றி வரச் செய்யப்பட்டு இறுதியில் கோயிலின் முன்னால் பலியிடப்படுகின்றது. இதற்குச் சூலாடு பலியிடுதல் என்று பெயர். கொங்கு நாட்டில் அண்ணன்மார் கோயில் வழிபாட்டில் 'பன்றி' குத்துதல் எனும் பெயரில் பன்றிகளைப் பலியிடும் முறைகள் காணப்படுகின்றன. பலியிடப்படும் பன்றிகளை மாலையிட்டு வரிசையாக நிற்க வைக்கின்றனர். பூசாரி அருள் வந்தவராய் ஈட்டியால் பன்றிகளைக் குத்திப் பலியிடுகின்றார். இவ்வாறு கொங்கு நாட்டில் பல்வேறு வகைகளில் விலங்குகள்

பலியிடப்படுவதற்கு முன்னால் கிடாய்களின் மேல் மஞ்சள் நீரை ஊற்றுகின்றனர். கிடாய் உடலைச் சிலிர்த்ததும் பலிக்கு இசைவு தெரிவித்து விட்டதாகக் கருதப்பட்டு ஒரே வெட்டாக வெட்டப்படுகின்றது. கிடாய் வெட்டப்பட்ட பின்னர் வெட்டியவர் மீதும் மஞ்சள் நீரை ஊற்றி ஆரவரிக்கின்றனர். பொதுவாக மனிதனின் தீமைகளை விலங்குகளுக்கு ஏற்றி அதனை இறைவனுக்குப் பலியிட்டு விடுவதால் மனிதனின் தீமைகள் குறைந்து விடுவதாக நம்பப்படுகிறது. கோயிலில் பலியிடப்படும் விலங்குகளின் இறைச்சியை உண்பதால் இறைவனின் அருள் கிடைக்குமென்று நம்பப்படுகிறது. ஆக நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டில் உயிர்ப்பலியிடல் ஒரு புனிதமான சடங்காகவே கருதிச் செய்யப்படுகின்றன.

**மயானப் பூசை**

கொங்கு நாட்டில் மாசானியம்மன், அங்காளம்மன், பேச்சியம்மன் கோயில் வழிபாடுகளில் மயானப் பூசை சிறப்பிடம் பெறுகிறது. மேற்கண்ட அம்மன் கோயில் வழிபாட்டின் போதும் மயானத்தில் மண்ணாலும், மாவாலும் அம்மன் போன்ற உருவம் வரையப்படுகின்றது. இவ்வுருவம் அச்சம்தரும் வகையில் உருவாக்கப்படுகிறது. இவ்வுருவத்தின் முன்னால் பன்றியைப் பலியிட்டு அதன் இரத்தத்தைக் காணிக்கையாக்குகின்றனர்.[3] உடுமலை வட்டத்திலுள்ள மூலனூர் அங்காளம்மன் கோயில் வழிபாட்டில் அங்காளம்மன் உருவத்தை மண்ணால் பெரிய அளவில் செய்து அதன் காலடியில் குழந்தையின் உருவத்தைச் சிறிய அளவில் செய்து வைத்திருக்கின்றனர். இக்கோயில் பூசை முடிந்த பின்னர் இக்குழந்தை உருவத்தை சிதைத்து விட்டு அங்கே ஒரு கிடாயையும் பலி கொடுக்கின்றனர்.[4] இது போன்ற வழிபாடுகளையே மயான பூசை என்கின்றனர். இதே மயான பூசை வழிபாடு கொங்கு நாட்டில் மிகுந்து காணப்படும் மாசானியம்மன் கோயில்களில் நடத்தப்பெறுகின்றது. மயானச் சாம்பலால் பெரிய உருவமாகச் செய்து கிடாய் பலியிட்டு வழிபடுகின்றனர். இவ்வாறு மயானத்தில் வழிபடப்படும் வழிபாடு கொங்கு நாட்டின் குல தெய்வ வழிபாடுகளில் காணப்படுகின்றன. மயானத்தில் குடி கொண்டிருக்கும் சிவனின் மனைவிகளாக இவ் அம்மன்கள் கருதப்பட்டு அவளைத் திருப்தி

படுத்துவதற்காக மயானத்தில் வழிபாடு செய்கின்றனர் என்றும் சொல்லலாம். பொதுவாக அம்மன் பெயர் ஏற்கும் எல்லாத் தெய்வங்களுமே சக்தியின் அவதாரமாகக் கருதப்படுவதால் அவளைத் திருப்திபடுத்துவதற்காக இவ்வழிபாடு நடத்தப் படுகின்றது என்றும் சொல்லலாம். இதனை உறுதி செய்யும் வகையில் பின்வரும் கருத்து அமைவதைக் காணலாம்." சிவபெருமானிடமிருந்து தோன்றிய வீரபத்திரனும், பத்ரகாளியும் தனித்தனியே உலாவித் தக்கன் கேள்வியை அழித்தனர் எனக் கந்த புராணம் கூறுமாறு சிவபெருமான் உமையம்மையடமிருந்து தோன்றியவளே வீரபத்ரனும் பத்ரகாளியும் ஆவர். இச்சக்தியே அங்காளியாவாள். இவர் தக்கனுடைய வேள்வியை வீரபத்தினிடமிருந்து அழித்து ஆடிய திருவிளையாடலை நினைவு கூர்வதற்கே ஆண்டுதோறும் மாசி மாதம் அமாவாசையில் மயான திருத்தம் (மயான கொள்ளை) என்னும் உற்சவத்தைக் கொண்டாடுகின்றனர்"[5] என்ற கருத்து இங்கு கருதத்தக்கது.

## ஆகாயபூஜை

சில குல தெய்வங்களுக்கு இரவு 12 மணிக்கு மேல் கிடாய்களைப் பலியிட்டு அதன் இரத்தத்தில் பொங்கல் சோற்றைக் கலந்து உருண்டை செய்து நான்கு திசைகளிலும் ஆகாயத்தை (வானம்) நோக்கி வீசுகின்றனர். இவ்வழிபாடு ஆகாய பூசை அல்லது பலிச்சோறு எறிதல் என்று அழைக்கப்படுகிறது ஈரோடு மாவட்டம் கணபதிபாளையத்தில் குருநாதசுவாமி, கருப்புச்சாமி வழிபாட்டில் தேவேந்திர குல வேளாளர் இரவில் மூன்று கிடாய்களை வெட்டி மூன்றுபடி இரத்தம் பிடித்து அதில் பொங்கல் சோற்றைக் கலந்து நான்கு உருண்டை செய்கின்றனர். இவ்வுருண்டை மனித முக வடிவில் அமைக்கப்பட்டு வானத்தை நோக்கி வீசப்படுகிறது. இப்பூசையின் போது ஆயிரம் தேங்காய் உடைக்கப்படுகிறது. பழனி வட்டாரம் கலையம்புத்தூரில் தேவேந்திர குல வேளாளர் வழிபடும் ரெட்டை மலை ஒண்டிச்சாமிக்கு பன்றி, ஆடு, கோழியைப் பலியிட்டு இதன் இரத்தத்தில் சோற்றைப் பிசைந்து எறிகாவு கொடுப்பார்கள். இச்சடங்கு செய்யும் போது பூசாரியைச் சங்கிலியால் கட்டிப்பிடித்து இருப்பர். ஆண்கள் மட்டுமே இவ்வழிபாட்டில்

கலந்து கொள்கின்றனர். இவ்வழிபாட்டின் நோக்கம் தீய ஆவிகளைத் திருப்திபடுத்துவதே ஆகும்.

**சாமியாடுதல்**

குல தெய்வ வழிபாட்டில் குறிப்பிட்ட தெய்வத்தின் ஆவி குறிப்பிட்ட மனிதன் வாயிலாக வெளிப்பட்டுத் தோன்றும் என்ற நம்பிக்கையின் வெளிப்பாடாக சாமியாட்டம் இடம் பெறுகின்றது. இவ்வழிபாட்டில் தாம் வழிபடும் தெய்வத்துடன் நேரடியாக உரையாடும் வாய்ப்பினை மக்கள் பெறுகின்றார்கள் இவ்வாறு சாமி அருள் வந்தவர்களுடன் மக்கள், உரையாடி தங்கள் குறைகளைக் களைய வேண்டுவது சாமி கேட்டல் என்று அழைக்கப்படுகின்றது. பொதுவாக மாரியம்மன், காளியம்மன், கருப்பணசாமி ஆகிய அனைத்து வழிபாடுகளிலுமே கம்பம் போட்ட நாளிலிருந்து இரவில் சாமியாடுதல் விடிய விடிய நடைபெறும். சாமியாடுபவர்களில் ஆண்களும் பெண்களும் அடங்குவர். சாமியாடுவதற்கென்று தனியாகத் தயாரிக்கப்பட்ட சாமி உடைகளையே ஆண்கள் அணிந்திருப்பர். பெண்கள் இதற்கெனவே வைத்திருக்கும் புதிய சேலையை அணிந்து கொள்வர். அரிவாள், வேல், வாள், ஈட்டி, பிரம்பு, சாட்டை ஆகியவற்றைக் கையில் வைத்துக் கொண்டு ஆண் சாமியாடிகள் ஆடுவர். சிலர் சாமிபெட்டி தூக்கி ஆடுவர். சாமியாடுபவர்களுக்கு அருள் இறக்கும் சடங்கைப் பூசாரியே செய்கின்றனர். பழனியில் தேவேந்திர குல வேளாளர் வழிபடும் அழகு நாச்சியார் அம்மன் கோயிலில் இடம் பெறும் சாமியாட்ட அமைப்பு முறை வருமாறு சாமியின் பெயர் கையில் வைத்து ஆடும் ஆயுதம் அல்லது பொருள்

| | | |
|---|---|---|
| 1. | பெரியசாமி (ஆண்) | வெட்டரிவாள், தடி |
| 2. | பொன்னழகு (பெண்) | திருநீற்றுத்தட்டு |
| 3. | முருகன் (ஆண்) | காவி உடை, பிரம்பு |
| 4. | நாச்சி (பெண்) | திருநீற்றுத்தட்டு, வேப்பிலை |
| 5. | கரியாக் குடும்பன் | வேல் |
| 6. | கட்டப்பழனி | வாள் |
| 7. | கருப்பச்சாமி | சாட்டை, தடி |
| 8. | மாயவர் | அரிவாள், தடி |

மேற்கண்டவாறு ஒவ்வொரு சாமி அருள் பெற்றவர்களும் அதற்குரிய சாமி பொருளை அடையாளமாக வைத்து ஆடுவது மரபு. இதல்லாமல் அரிவாள் மேல் நின்று ஆடுவதும், பாதக்குறடு எனும் முள் செருப்பின் மீது நின்று ஆடுவதும் உண்டு. சிலர் தீர்ப்பந்தத்தை கையில் வைத்துக் கொண்டு ஆடுவதும் உண்டு. சில குல தெய்வக் கோயில்களில் 21 தெய்வம் என்று கொண்டு 21 பேர் ஆடுவர். சாமியாட்டம் பெரும்பாலும் விடிய விடிய நடைபெறும். சாமியாட்டம் முடிந்து கிடாய் பலியிடப்படும்.

### படையல்

குல தெய்வ வழிபாட்டுச் சடங்கில் இடம் பெறும் முக்கியச் சடங்கு படையல் போடுதல் என்பதாகும். இறைவனுக்கு முன்பு உணவுப் பொருட்கள், தேங்காய், பழம், பயறு வகைகளைப் படைத்து வழிபடுவது படையல் என்று சொல்லப்படுகின்றது. பெரும்பாலும் பலியிடப்படும் விலங்குகளின் இறைச்சியைச் சமைத்து சாராயம் போன்றவற்றை கலந்து படையலாக்குவதும் காணப்படுகின்றது. இப்படையல் உணவை பங்காளிகள் சேர்ந்து உண்பதைக் குலவிருந்துச் சடங்கு என்கின்றனர். சில குல தெய்வங்களுக்கு அத்தெய்வத்தைக் குல தெய்வமாக வழிபடும் பங்காளிகள் மட்டும் கிடாய் பலியிட்டு அதனைச் சமைத்து கூட்டாக உண்பதும் உண்டு. இப்படையல் வழிபாட்டு முறை தொன்மையான பழங்குடித் தன்மையை நினைவூட்டுவதாக அமைகின்றது எனலாம்.

### ஊர்ப் பொதுத் தெய்வ வழிபாடுகள்

கொங்கு நாட்டில் பெரும்பாலான கோயில்களில் அம்மன் தெய்வங்களே பல்வேறு பெயர்களில் ஊர்ப் பொதுத் தெய்வமாக வழிபடப்படுகின்றன. இத்தெய்வ வழிபாட்டு முறைகளில் குறிப்பிடத்தக்கன குண்டம் இறங்குதல், கரகம் எடுத்தல், தீச்சட்டி எடுத்தல், முளைப்பாலிகை எடுத்தல் போன்றன ஆகும். இவ்வழிபாட்டின் தொடக்கமாக அமையும் நோன்பு சாட்டுதல், கம்பம் போடுதல், அம்மன் அழைப்பு ஆகியன விழாவின் தொடக்கத்தைக் குறிக்கும். நோன்பு சாட்டுதல் என்பது விழாவினைப் பறையடித்து அறிவிப்பதாகும். கம்பம் போடுதல் என்பது விழாத் தொடக்கத்தைக் குறிப்பதே ஆகும். கோயில் முன்

முக்கோண வடிவமுள்ள கம்பம் நடப்படுகிறது. கம்பத்தின் மீது பூவோடு வைக்கப்படுகிறது. இக்கம்பம் பெண் தெய்வத்தின் கணவனாகக் கருதப்படுகிறது. திருமணமாகாத கன்னிப் பெண்களுக்கு விழாவின் போது இக்கம்பம் நடுதல் எனும் சடங்கு இல்லை. இக்கம்பத்தை அக்னிக் கம்பம், பூவோட்டுக்கம்பம் என்று அழைக்கின்றனர். இக்கம்பம் பால் மரத்தால் ஆனது. மூன்று கிளைகளாக இது பிரிந்து இருப்பதாக இக்கம்பம் வெட்டப்பட்டிருக்கும். கம்பம் நடப்பட்ட பின்னர் பழனி வட்டாரத்தில் தினந்தோறும் கம்பத்தைச் சுற்றிக் கும்மி அடிக்கின்றனர். கம்பம் வெட்டுதல் தொடங்கி விழா முடியும் வரை ஊரிலுள்ள அனைத்துச் சமூகமும் விழாவின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் பங்கு பெறுகின்றன. காட்டாகக் கோபி வட்டம் சவண்டப்பூரில் வழிபடப்படும் சீதாலம்ம மாரியம்மன் கோயிலை இங்குள்ள தேவேந்திர குல வேளாளர், கவுண்டர், ஆசாரி, முதலியார், பண்டாரம் ஆகியோர் வழிபடுகின்றனர். இவ்வழிபாட்டில் இச்சமூகத்தின் பங்களிப்பு வருமாறு அமைகின்றது.

| | | |
|---|---|---|
| தேவேந்திர குல வேளாளர் | - | கம்பம் வெட்டுதல்<br>கிடாய் வெட்டுதல், வரி வசூல் |
| கவுண்டர் | - | படைக்கலம் படைத்தல் |
| ஆசாரி | - | கம்பம் செதுக்குதல் |
| பண்டாரம் | - | பூசாரி |
| முதலியார் | - | சப்பரம் தூக்குதல் |

மேற்கண்டவாறு கோயில் வழிபாட்டுச் சடங்குகளைப் பிரித்துக் கொண்டு சமூக நல்லினக்கத்துடன் வழிபாடு செய்யும் முறை ஊர்ப் பொதுத் தெய்வ வழிபாட்டின் சிறப்பம்சமாகும். இதே போன்றுதான் பழனி நகரிலுள்ள மாரியம்மன் கோவிலிலும் தேவேந்திர குல வேளாளரும், கவுண்டரும் இணைந்து வழிபடுவதைக் காணமுடியும். ஆனால் ஒரு சமூகம் மட்டுமே தனித்து வாழும் ஊரில் அச்சமூக மக்கள் அனைவரும் சேர்ந்து வழிபடும் வழிபாடாக ஊர்ப் பொதுத் தெய்வ வழிபாடு அமையும்.

**மாவிளக்கு எடுத்தல்**

கொங்கு நாட்டு அம்மன் கோயில் விழாக்களில்

மாவிளக்கு எடுத்தல் எனும் சடங்கு மிகச் சிறப்பாகச் செய்யப்படும். பாரியூர் குண்டத்துக் காளியம்மன் விழாவில் இடம் பெறும் மாவிளக்கு ஊர்வலம் பார்ப்பதற்குக் கண்ணைக் கவர்வதாக இருக்கும். பெண்கள் மட்டுமே மாவிளக்கு எடுத்து வருகின்றனர். தினை அரிசி, பச்சரிசி இரண்டையும் நன்கு ஊற வைத்து இடித்து மாவாக்கி, சர்க்கரைப்பாகு ஊற்றி குடம், அல்லது தட்டுக்களில் வைத்து மேல் பகுதியில் குழி செய்து அதில் நெய் ஊற்றி விளக்கேற்றி வழிபடுகின்றனர். மாவிளக்கைக் வண்ணக் காகிதப் பூக்களால் அலங்கரித்து எடுத்து வருகின்றனர். மாவிளக்கு அம்மன் அழைப்பின் போது ஊர்வலமாக எடுத்து வரப்படுகின்றது. சிலர் தாரை தப்பட்டை முழங்க வெகு விமர்சையாக எடுத்து வருவதும் உண்டு. பொதுவாக ஏதேனும் வேண்டுதலாக மாவிளக்கு எடுப்பதாக நேர்ந்து கொள்வர். காட்டாக வயிற்று வலி நோய் ஏற்பட்டவர்கள் வயிற்றில் மாவிளக்கு எடுப்பதாக நேர்ந்து கொள்கின்றனர். கண்நோய் ஏற்பட்டவர்கள் கண்ணில் மாவிளக்கு எடுப்பதாக நேர்ந்து கொண்டு அதன்படியே செய்வது வழக்கம். மாவிள்கு எடுத்தல் பல்வேறு வேண்டுதல்களுக்காக என்றாலும் மாவிளக்கு செய்யப்படும் மாவு அந்த ஆண்டில் விளைந்த புது நெல்லில் தயார் செய்யப்பட்டு இறைவனுக்குக் காணிக்கை ஆக்கப் படுவதனையே நோக்கமாகக் கொண்டு எழுந்த சடங்காகவே காணப்படுகின்றது.

### கரகம் எடுத்தல்

அம்மன் வழிபாட்டில் கரகம் எடுத்தல் சிறப்பான சடங்காகும். கரகம் என்றால் பிரார்த்தனைக்கு எடுக்கும் பூக்குடம் என்று பெயர். மண்கலயம், அல்லது பித்தளைச் செம்பில் மஞ்சள் நீரை நிரப்பி அதன் மேல் பூக்களையும், வேப்ப இலைகளையும், தென்னம்பாளையும் வைத்து நூலால் கட்டுகின்றனர். இவ்வாறு தயார் செய்யப்பட்ட கரகத்தில் மஞ்சளை அரைத்துப் பூசி அம்மன் முகத்தை வரைகின்றனர். இக்கரகம் புனிதமான நீர் நிலையில் தயாரிக்கப்படும். இதனைப் பூசாரிகளும் சாமியாடிகளும் தயார் செய்கின்றனர். கரகம் தயார் செய்யப்பட்டவுடன் அம்மன் கண்திறப்பு பூசாரியால் செய்யப்படுகின்றது. இச்சமயம் ஒரு கிடாயைப் பலியிட்டு அதன்

இரத்தத்தை அம்மன் நெற்றியில் பூசுகின்றனர். அம்மன் வழிபாட்டில் இந்தக் கரகமே அம்மனாகக் கருதி வழிபடப் படுகின்றது. இக்கரகத்தைப் பூசாரி சுமந்து வரும் போது மாவிளக்கு, முளைப்பாலிகைகள் ஊர்வலமாகப் பெண்களால் எடுத்து வரப்படும். நீர் நிலையிலிருந்து கோயில் வரை கரகம் வந்து சேரும் வரை பூசாரியின் மீது மக்கள் மஞ்சள் நீரை ஊற்றி காலில் விழுந்து வழிபடுகின்றனர். கோயிலில் வைக்கப்படும் இக்கரகத்திற்கே வழிபாடும், படையலும், பூசையும் செய்யப் படுகின்றன. விழா முடிவில் இக்கரகத்தை தயாரித்த அதே நீர்நிலையில் போட்டு விடுகின்றனர். இக்கரகத்தையே மக்கள் அம்மனாகக் கருதி வழிபடுவதைக் காண்கையில் மழையைத்தான் இம்மக்கள் மாரி (மழை) அம்மனாகக் கருதி வழிபடுகின்றனர் என்றும் கருதலாம்.

## முளைப்பாலிகை எடுத்தல்

அம்மன் வழிபாட்டுச் சடங்குகளில் 'முளைப்பாலிகை' எடுத்தல் சடங்கும் ஒன்று. அம்மன் வழிபாடு தொடங்கப் படுவதற்கு எட்டு நாட்களுக்கு முன்னரே முளைப்பாலிகை வளர்க்கும் சடங்குகள் தொடங்கப்படுகிறது. பொதுவாகப் பெண்கள் மட்டுமே இச்சடங்கில் கலந்து கொள்கின்றனர். கன்னிப் பெண்கள், மணமான பெண்கள், வயதடைந்த பெண்கள் என்றவாறு அனைவரும் இச்சடங்கில் பங்கு பெறுவர். முளைப்பாலிகை எட்டு நாட்களுக்கு இப்பெண்களால் சிரத்தையுடன் வளர்க்கப்பட்டு விழா தொடங்குகையில் அம்மன் கோயிலில் வைக்கப்படும். அம்மன் கோயிலில் வைக்கப்பட்ட முளைப்பாலிகையைச் சுற்றி பெண்கள் கும்மிப் பாடல்கள் பாடிக் கும்மியடிப்பார்கள். இப்பாடலடி களில் மழை வளத்தையும், குழந்தை மற்றும் வளமான வாழ்க்கையையும் தங்களுக்குத் தர வேண்டும் என்பதாக வேண்டிப் பாடுகின்றனர். காட்டாக

"பூக்காத மரம் பூக்காதோ நல்ல
பூவுல வண்டு விழுகாதோ
பூக்க வைக்கும் மாரியம்மனுக்கு
பூவால சப்பரம் சோடணையாம்
காய்க்காத மரம் காய்க்காதோ

காயுல வண்டு விழுகாதோ
காய் காய்க்க வைக்கும் பேச்சியம்மனுக்கு
காயால சப்பம் சோடணையாம்"[6]

என்றவாறு பூக்காத மரம் பூக்க வேண்டும், காய்க்காத மரம் காய்க்க வேண்டும் என்று பாடுவது தாவரச் செழிப்பை வேண்டிப் பாடுவதாகும். முளைப்பாலிகை நன்கு வளர்வது போன்று அந்த ஆண்டு வேளாண்மைப் பயிர்களும் நன்கு வளர்ந்து நல்ல விளைச்சலைக் கொடுக்கும் என்று நம்புகின்றனர். பொதுவாக மழை பெய்வது, பயிர்கள் வளர்வது, வேளாண்மையில் அதிக விளைச்சல் கிடைப்பது இவையெல்லாம் கடவுளால் நிகழ்கின்றன என்று இன்றும் மக்கள் நம்புகின்றனர்.

## குலம் தழைக்க வேண்டும்

தாவரச் செழிப்பை வேண்டிப் பாடல்கள் அமைவது போன்று குலம் தழைக்கக் குழந்தை வரம் வேண்டும் என்றும் வேண்டிப் பாடுவதாகவும் கும்மிப்பாடல்கள் அமைகின்றன

கன்னி வந்து நீர் தெளிச்சா
கல்யாணம் கூடுமம்மா
இருசி வந்து நீர் தெளிச்சா
இந்திரனைப் பெற்றெடுப்பா
மலடி வந்து நீர் தெளிச்சா
மைந்தனைப் பெற்றெடுப்பா[7]

இப்பாடலடிகள் முளைப்பாலிகை எடுப்பதனால் கன்னிப் பெண்களுக்குத் திருமணம் விரைவில் நடைபெறும் என்றும், குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்கு குழந்தைப்பேறு கிடைக்கும் என்றும் குறிப்பிடுகின்றன. இங்கு திருமணச் சடங்குகளில் முளைப்பாலிகைகளை மணமேடைகளில் வைப்பது நினைவுகூரத்தக்கது. முளைப்பாலிகைகளில் தாவர விதைகள், நன்கு வளர்வது போன்று திருமணமான மணமகளும் குழந்தைப் பேற்றை விரைவில் பெறுவாள் என்ற நம்பிக்கையிலேயே மணமேடையில் முளைப்பாலிகைகளை வைக்கின்றனர்.

**பாவனை நடனம்**

முளைப்பாலிகைச் சடங்கில் மழைவளம் வேண்டும் பாவனைக் கூறுகள் மிகுந்து காணப்படுகின்றன. முளைப்பாலிகை இடும் முதல் நாளன்று பெண்கள் ஈரச்சேலையுடன் கலந்து கொண்டு முளைப்பாலிகைக்கு நீர் தெளிப்பர். அப்பொழுது பாடப்படும் பாடல் வருமாறு

"தானானே தானானே
தங்க மக தானானே
நீல வருணப் பட்டுடுத்தி
பட்டு மினு மினுக்க
பாதரசம் சோதிமின்ன
ஊர வரவழைக்க
ஒத்துமையா முளைப்பரப்ப
வெள்ள நல்ல சிலைக்காரி
விலகி நின்னு நீர் தெளிக்க
சாய நல்ல சிலைக்காரி
சாஞ்சு நின்னு நீர் தெளிக்க[8]

இடியுடன் கூடிய மழை பெய்ததாகவும், அவ் வெள்ளத்தில் பெண்கள் நீராடி விட்டு முளைப்பரப்பி, நீர் தெளிக்கும் சடங்கினைச் செய்வதாகவும் இப்பாடலின் பொருள் அமைகிறது. இது கற்பனையான பாடலடிகள் என்றாலும் இப்பாடலின் மூலம் மழை வேண்டுமென்ற விருப்பத்தைத் தெரிவிக்கிறார்கள் என்றும் கருதலாம். முளைப்பாரி ஒரு புராதனச் சடங்கு என்ற கட்டுரையில் ஆ. சிவசுப்பிரமணியன் நெல்லை மாவட்டத்தில் வழங்கும் மேற்கண்ட களப்பகுதிப் பாடல் போன்ற பொருளுடைய ஒரு முளைப்பாலிகைப் பாடலை எடுத்துக்காட்டி பின்வருமாறு விளக்குவார். "மழையில் நனைந்தது போல ஈரச்சேலையுடன் நின்று கொண்டு மழை பெய்ததாகவும், ஆற்றில் வெள்ளம் வந்ததாகவும் ஒரு கற்பனை இங்கு உருவாக்கப்படுகிறது. இக்கருத்தமைந்த பாடலைப் பாடியவாறு அனைவரும் வளைக்கரங்கள் தாமொலிக்க கை கொட்டுவது இடியோசை போல அமைகிறது. இந்த வகையில் முளைப்பாரியின் தொடக்கமானது மழை வேண்டும் பாவனை நடனமாக அமைகிறது"[9] என்பார். இக்கருத்திலிருந்து

முளைப்பாளிகை கும்மி நடனம் பயிர்களுக்கு மழை வேண்டும் பாவனை நடனமாக அமைகிறது என்றும் கருத இடமுள்ளது.

## தீச்சட்டி எடுத்தல்

அம்மன் வழிபாட்டில் தீச்சட்டி எடுத்தல் சடங்கும் ஒன்று. இதனைப் பூவோடு எடுத்தல் என்று அழைக்கின்றனர். அம்மை நோயால் பாதிப்படைந்தவர்களும், குழந்தைப்பேறு வேண்டுபவர்களும் தீச்சட்டி எடுத்தல் எனும் நேர்த்திக்கடனைச் செய்கின்றனர். தீச்சட்டி எடுத்து ஆடும் போது முகத்திலும், உடலிலும் அலகு குத்தி (வேல்)க் கொண்டு ஆடுவதும் உண்டு. ஆண், பெண் இருபாலரும் தீச்சட்டி எடுக்கின்றனர். மழை பெய்யாமைக்கும். "அம்மை போன்ற நோய்களுக்கும் அம்மனின் சினமே காரணமென்று நம்புவதால் அம்மனின் சினத்தைத் தணிக்கும் பொருட்டு தீச்சட்டி எடுத்து ஆடுகிறார்கள் என்றும் கருதலாம். தீச்சட்டி எடுக்கும் சடங்கு பற்றிய ஒரு கதை சொல்லப்படுகிறது. "அக்னி பகவான் கோபமுற்றுக் கனலாக மாறினார். அவ்வெப்பம் தாங்காது மக்கள் பெரிதும் துன்பம் அடைந்தனர். வெப்பு நோயில் பலர் மாண்டனர். இதனைக் கண்ணுற்ற சக்தி அதாவது மாரியம்மன் ஒரு மண் கலயத்தைக் கையிலேந்தி சூரியனை மறைக்கிறார். இதனால் வெயில் குறைந்து மக்கள் நலம் பெற்றனர். ஆனால் சூரியனின் வெப்பம் அம்மனைப் பெரிதும் பாதித்தது. அம்மன் வெப்பு நோயால் அவதியுற்றத்தைக் கண்ணுற்ற சிவன் உலகம் முழுவதும் வேப்ப மரங்களைப் படைக்கின்றார். இம்மரங்களால் எழுந்த குளிர்ச்சியில் அம்மன் நலம் அடைந்தாள். இவ்வாறு மக்களைக் காக்கும் பொருட்டு அக்கினி பகவானைக் கையிலேந்திய அம்மனுக்கு நேர்த்திக் கடனாக மக்கள் அதே அக்னியைச் கையிலேந்துகிறார்கள்" என்று சொல்லப்படுகிறது. இவ்வகையில் தீச்சட்டி எடுத்தல் சடங்கு அம்மன் தெய்வத்தின் சினத்தைத் தணிப்பதற்காக மேற்கொள்ளப்படும் வழிபாடாக அமைகின்றது. மேலும் தீச்சட்டி என்பது சூரியனைக் கையிலேந்தும் குறியீடாகவும் அமைந்துள்ளது எனலாம்.

## பூக்குழி இறங்குதல்

சக்தியின் அம்சங்களாகக் கருதப்படுகின்ற காளியம்மன்,

பொன்காளியம்மன், கருமியம்மன், நீலியம்மன், பாரியூர் கொண்டத்துக் காளியம்மன், தண்டு மாரியம்மன், மாசாணி யம்மன், கோட்டை மாரியம்மன் ஆகிய கொங்கு நாட்டுக் கோயில்களில் பூக்குழி இறங்குதல் அல்லது குண்டம் இறங்குதல் எனும் சடங்கு சிறப்பாக நடைபெறுகிறது. கொங்கு நாட்டில் பிரசித்தி பெற்று விளங்கும் பாரியூர் கொண்டத்துக் காளியம்மன் திருவிழாவில் நடைபெறும் குண்டம் இறங்குதலை வருமாறு காணலாம்.

"ஒவ்வொரு ஆண்டும் மார்கழி மாதம் இடையில் இந்த அம்மனுக்கு பூச்சாட்டு விழாத்தொடங்கி மாத இறுதியில் 15-ம் நாள் குண்டம் இறங்குதல் நடைபெறும். இக்குண்டத்தின் நீளம் 60 அடியாகும். இப்பகுதியில் மெராசு உரிமை பெற்ற தேவேந்திர குல வேளாளர்கள் இக்குழி செதுக்குதலைத் தொடங்கி வைக்கின்றனர். இக்குழியில் மரக்கட்டைகள் அடுக்கப்பட்டு நெருப்பிடப்பட்டு விடிய விடிய எரிந்து தனலாக இருக்கும். இந்நெருப்பில் 15 நாட்கள் விரதமிருந்து வேண்டிக் கொண்டவர்கள் ஆயிரக்கணக்கில் ஆண், பெண், சிறுவர் என்றவாறு நடந்து சென்று தங்களது வேண்டுதலை நிறைவேற்றுகின்றனர்[10] குண்டம் இறங்குதலை முதன் முதலில் பூசாரி இறங்கி தொடங்கி வைக்கின்றார். இதன் பின்னரே பொதுமக்கள் அனுமதிக்கப்படுகின்றனர்.

"நெருப்பைத் தூய்மையின் அடையாளமாகப் பழந்தமிழ் மக்கள் எண்ணினர். தூய்மையடைய தீ மிதிக்க வேண்டும் என்பது சமுதாயக் கோட்பாடாக இருந்திருக்கிறது"[11] இது போன்ற சடங்குகள் தூய்மைப்படுத்தும் கோட்பாட்டிற்குள் (Purificatory Theory) அடங்கும் என்பர் மானுடவியல் அறிஞர்கள்[12] இக்கருத்துக்களின் படி தீ மிதி வழிபாடு தூய்மைப்படுத்தும் நோக்கில் செய்யப்படும் சடங்காக அமைகிறது.

### தேரோட்டம்

கொங்கு நாட்டில் அம்மன் கோயில்களில் அம்மனைத் தேரில் வைத்து ஊரினை வலம் வரும் தேரோட்டம் எனும் சடங்கு மிகச் சிறப்புப் பெற்றது ஆகும். பழனி மாரியம்மன் கோயிலின்

தேர்த்திருவிழா மிகச் சிறப்புப் பெற்றது ஆகும். இத்தேரோட்டம் குறித்து ஒரு நாட்டுப் புறப்பாடல் வழக்கிலிருப்பதை வருமாறு காணலாம்.

"யாரு தொட்டாலும் தேரோடாது
ஐயரு தொட்டாலும் தேரோடாது
தேருக்கு உகந்தவன் தேவன் திருப்பள்ளன்
தேரைத் தொட்டதும் தேரோடும்"[13]

இப்பாடல் குறிப்பிடும் தேர்வடம் பிடித்து இழுக்கும் உரிமை கொங்கு நாடு முழுமையும் என் தமிழகம் முழுமையும் இவர்களுக்கு இருப்பதைக் காணமுடியும். பேரூர் பட்டீஸ்வரர் கோயில், அவினாசி கோயில் போன்றவற்றில் இம்மக்களே தேரினை இழுக்கும் உரிமை பெற்றுள்ளதை இங்கே நினையலாம்.

## மஞ்சள் நீராடுதல்

குல தெய்வம், ஊர்ப் பொதுத் தெய்வம் ஆகிய இரண்டு வழிபாட்டிலும் மஞ்சள் நீராடுதல் தவறாது இடம் பெறும். மஞ்சள் நீராடுதல் விழாவின் நிறைவைக் குறிப்பதாக விளங்குவதுடன் மழை வேண்டுதலைப் பாவனையாக்கிக் காட்டும் ஒருவகை பாவனைச் சடங்காகவும் அமைகின்றது. ஏனெனில் எல்லா வழிபாடுகளுமே மழை வேண்டுதலை முதன்மை நோக்கமாகக் கொண்டு விளங்குவதால் மஞ்சள் நீராடுதல் சடங்கு விழா நிறைவில் மழை பெய்துவிட்டது என்ற மன நிறைவை மக்களுக்குக் கற்பனையாக உண்டாக்குகின்றது எனலாம்.

## தொகுப்புரை

1. குல தெய்வ வழிபாட்டில் இடம் பெறும் பலியிடுதல் முறைகள் தீய ஆவிகளையும் கடவுளர்களையும் திருப்திபடுத்துவதற்காகச் செய்யப்படுவதாக அமைகின்றன.

2. பன்றி குத்துதல் சடங்கு கொங்கு நாட்டில் மட்டுமே இடம் பெறும் தனித்த பலியிடும் முறையாகும்.

3. மயானப் பூசை எனும் பெயரில் மாசாணியம்மன், அங்காளம்மனுக்கு நடைபெறும் சடங்குகள் தெய்வமானவர்கள் எரியூட்டப்பட்ட இடத்தில் வழிபாடு செய்யும் தொன்மை வழக்கத்தை நினைவூட்டுகின்றது.

4. சாமியாடுதல் எனும் மரபு இறைவன் மனிதருள் இறங்கி ஆடுவர் என்ற நம்பிக்கையை உறுதி செய்வதாகும். இங்கு சாமியாடும் மனிதர்களே தற்காலிகமான கடவுளர்களாகக் கருதப்படு கின்றனர்.

5. படையல் எனும் குல விருந்துச் சடங்கு குல தெய்வ வழிபாட்டில் மட்டுமே இடம் பெறும் புராதனச் சடங்காகும்.

6. ஊர்ப் பொதுத் தெய்வ வழிபாடு ஊரைக் காக்கவும், மக்களைக் காக்கவும், மழை வேண்டியுமாக நடத்தப்பெறுகின்றன. இவ்வழிபாட்டில் சமூக வேறுபாடுகள் மறைந்து சமூக நல்லிணக்கம் காணப்படுவதை இவ்வாய்வு கண்டறிந்து சொல்லியுள்ளது.

7. மாவிளக்கு எடுத்தல் எனும் சடங்கு நெல் எனும் தானியத்தைப் படையல் பொருளாக்கி இறைவனுக்குப் படைக்கும் காணிக்கையாகவே அமைகின்றது.

8. கரகம் அம்மனாகவே கருதப்படுவதால் மழையையே மக்கள் மாரியம்மனாகக் கருதி வழிபடுகின்றனர் என்பதை இவ்வாய்வு சுட்டிக் காட்டியுள்ளது.

9. முளைப்பாலிகை எடுத்தல் சடங்கும் முளைப்பாலிகை நடனமும் மழை வேண்டும் பாவனைச் சடங்காகவே அமைகின்றன.

10. பூக்குழி இறங்குதல் எனும் வழிபாடு தூய்மைப்படுத்தும் நோக்கில் மேற்கொள்ளப்படும் வழிபாடாகும்.

## குறிப்புகள்

1. செல்வராசு க., கொங்கு வேளாளர் குல தெய்வ வழிபாடு, பிஎச்டி ஆய்வேடு, 1992, ப. 115
2. மலர்விழி, கோ.தி., அவிநாசிக் கோயில் சிற்பங்கள், எம்ஃபில் ஆய்வேடு, 1984, ப. 85.
3. நாகரத்தினம், வெ.அ., கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும் பண்பாடும், பி.எச்.டி. பட்ட ஆய்வேடு, 1994, ப. 150
4. நடராஜ் செட்டியார், (50) தேவனூர் புதூர், உடுமலை வட்டம்.
5. நாகரத்தினம், வெ.அ., முகாப. ப. 224
6. வீரம்பாள், (60), தேவேந்திர குல வேளாளர், பால சமுத்திரம், பழனி
7. மேலது
8. மேலது
9. சிவசுப்பிரமணியன், ஆ., முளைப்பாரி, ஒரு புராதனச் சடங்கு, தமிழ்க் கலை, ப. 72
10. கள ஆய்வில் நேரில் தொகுத்தது
11. சக்திவேல், சு., நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 120
12. முத்துலட்சுமி, சு., பழனி வட்டார கிராம தேவதைகள் - ஓர் ஆய்வு, ப. 140

# 4. வேளாண் வள வழிபாடு

இயற்கையைக் கட்டுப்படுத்த சடங்குகளாலும் பலியீடுகளாலும் வழிபாடு செய்த மனித சமூகம் அதே வழிபாட்டை வேளாண் பொருட்களை உற்பத்தி செய்யவும் சில சடங்குகளையும் வழிபாடுகளையும் மேற்கொண்டது. இவ் வழிபாடுகளை வேளாண் வளவழிபாடு என்று அழைக்கலாம். கொங்கு நாட்டில் குறிப்பாக நெல் வேளாண்மையைச் சங்ககாலம் தொடங்கி இன்றுவரை உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களிடம் காணப்படும் வேளாண் வள வழிபாடுகளான மல்லாண்டை வழிபாடு, இந்திர விழா எனும் நாற்று நடவுத் திருவிழா, தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு, நிலாப்பிள்ளை வழிபாடு, அலகுக் கதிர் வழிபாடு போன்ற வழிபாடுகளை இவ்வியல் விளக்குகின்றது.

## இந்திர விழா எனும் நாற்று நடவுத் திருவிழா

கோயமுத்தூர் பேரூரில் அமைந்துள்ள பட்டீஸ்வரர் கோவிலில் ஆண்டுதோறும் ஆனி மாதத்தில் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்கள் இந்திரவிழா என்னும் நாற்று நடவு உற்சவம் என்ற பெயரில் ஒரு விழாவினைக் கொண்டாடுகின்றனர். இவ்விழா கச்சியப்ப முனிவர் எழுதிய பேரூர்ப் புராணத்தின்படி சிவன், பார்வதி, விநாயகர், முருகன் மற்றும் தேவர்கள் மள்ளர் (பள்ளர்)களாக வயலில் இறங்கி வேளாண்மைத் தொழில் செய்தனர் என்ற ஐதிகத்தின்படி இம்மக்களால் பண்டைக்காலம் முதல் இவர்களின் சமூக விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இது புராணக் கதையைத் (Myth) திருவிழாவாக நடித்துக் காட்டும் ஒரு சடங்காக அமைந்தாலும், இவ்விழாவின் பல்வேறு சடங்கியல் கூறுகள் இவ்வுலகம் பசியும் பிணியும் நீங்கி வசியும் வளனுடனும் வாழவேண்டும் என்பதான உலகப் பொதுநோக்குடன் கொண்டாடப்படுகின்றது.

### பள்ளுப்படலம் எனும் திருப்பேரூர் புராணம்

கொங்கு நாட்டிற்கு சுந்தரர் மூன்றாவது முறையாக வருகை தந்தபோது பேரூருக்கு வருகை புரிந்தார். அச்சமயம் பேரூரில் குடிகொண்டிருக்கும் பட்டீஸ்வரர் அருகிலிருக்கும் வயலில் மள்ளனாக (பள்ளராக) மாறி வேலை செய்கின்றார். பார்வதி தேவியார் பள்ளியாக மாறி கழனியிலே நாற்று நடுகின்றார். விநாயகக் கடவுளும் முருகக் கடவுளும் மள்ளச்சிறார்களாக மாறி வயலில் விளையாடினர். திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் நுகம், கலப்பை மேழி, கொழுவு, வார், தார்கோல், எருது, விதைகள், நாற்று ஆகிய அனைத்து உழவுக்கருவிகள், இடுபொருட்களுடன் வந்தனர். இலக்குமி, சரசுவதி, இந்திராணி முதலிய தேவமகளிர் மள்ளத்தியர்களாக மாறி பச்சைநாயகி உமாதேவியோடு வயலில் நாற்று நட்டனர். இவ்வாறு இவர்கள் கழனியிலே வேலை செய்வது தெரியாது கோவிலுக்குள் சென்ற சுந்தரர் சிவபெருமானை அங்கே காணப்பெறாமல் நந்தியிடம் வினவ, நந்தி கடைக்கண் காட்ட வயலில் வந்து சுவாமியையும் அம்மையையும் கண்டு வணங்கினார். இது திருப்பேரூர்ப் புராணம் தரும் செய்தி. இச்செய்தி குறித்து ஆய்வுரை எழுதியுள்ள கோவைக்கிழார் வருமாறு குறிப்பிடுவார்.

"சுந்தரர் கொங்கு நாட்டிற்கு வந்த காலம் கி.பி.850 ஆகும். அக்காலத்திலிருந்தே பள்ளர்களும் கோயில் விழாக்களில் கலந்து கொண்டிருப்பார்கள் என்ற கருத்தைப் பள்ளுப்படலத் திருவிளையாடல் என்ற ஐதிகத்திலிருந்து நாம் ஊகிக்கமுடியும். இந்த நாளிலும் அத்திருவிழாவைக் கொண்டாடுவதற்காக அமைந்த நாற்று நடவு உற்சவத்திலே அவர்கள் கலந்து கொள்வது போல வேறு தலங்களில் நாம் பார்க்க முடியாது"[1] என்பார். இதிலிருந்து கி.பி. 850க்கு முன்பிருந்தே இம்மக்கள் இததிருவிழாவை நடத்தி வந்திருப்பர் என்பதை அறிய முடியும்.

### பேரூர்க் கோவிலும் தேவேந்திர குல வேளாளரும்

பேரூர்க் கோவில் அமைந்துள்ள நொய்யல் ஆற்றங்கரையின் இரு புறமும் இம்மக்கள் வாழும் 40 ஊர்கள் உள்ளன. கோவிலின் வாயிலின் முன்பு இம்மக்கள் இரண்டு வீதிகளில் நானூறுக்கும் மேற்பட்ட வீடுகளில் வாழ்கின்றனர். தனிப்பட்ட சமூகம் எனும் வகையில் பேரூரில் பண்டை காலம் தொட்டு வாழும் ஒரே சமூகம்

தேவேந்திர குல வேளாளர் சமூகமே ஆகும். "பேரூருக்குச் சுந்தரர் வரும்போது கோவிலின் கோபுரம் தெரியாத அளவு இம்மக்களின் மாட மாளிகைகள் இருந்ததாகவும் இதனைப் பார்த்த சுந்தரர் சபித்துவிட்டதாகவும் அதிலிருந்து பேரூரில் வாழும் தேவேந்திர குல வேளாளர் நலிவுற்று வளமிழந்து போயினர் என்றும் ஒரு வழிவழிக் கதை சொல்லப்படுகின்றது"[3]

கோவையில் வாழும் தேவேந்திர குல வேளாளர்களில் நான்கு வம்சா வழியினர் காணப்படுகின்றனர். அவர்கள் கொங்குத் தேவேந்திர குல வேளாளர், சோழியத் தேவேந்திர குல வேளாளர், பாண்டியத் தேவேந்திர குல வேளாளர், கடையத் தேவேந்திர குல வேளாளர் ஆகியோர் ஆவர். இந்நான்கு பிரிவினருக்கும் தனித்தனியே நான்கு பட்டக்காரர்கள் இருக்கின்றனர். இந்நான்கு வம்சா வழியினருக்குமே பேரூர் கோவிலில் வழிபாட்டு உரிமையுள்ளது. பேரூரிலுள்ள தேவேந்திர சமூக மடத்தை இந்நான்கு பிரிவினருமே நிர்வகிக்கின்றனர். இப்பட்டக்காரர் களுக்குப் பட்டம் சூட்டும் விழாவும் ஊர்ப்பண்ணாடிகளுக்குப் பட்டம் சூட்டும் விழாவும் குடும்ப விழாக்களான குழந்தைகளுக்குக் காதுகுத்துதல், திருமணம் போன்ற விழாக்களும் இந்த மடத்தில் தான் நடைபெறுகின்றன.

இம்மடம் பேரூர் கோவில் கட்டப்பட்ட அதே சோழர் ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்டுள்ளது. இது குறித்து டாக்டர் குருசாமி சித்தர் கூறும் கருத்து வருமாறு அமையும் "இக்கோயில் முகப்புக் கோபுரம் கட்டப்பட்ட காலத்திலேயே கோயில் கட்டிய அதே சிற்பிகளைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது பேரூர் தேவேந்திர குல வேளாளர் மடம். கோயிலும் மடமும் கட்டியவர்கள் ஒரே குழுவினர். தேவேந்திர குல வேளாளர் மடத்திலே இருக்கின்ற மீன்சின்னம் கோபுர வாயிலிலும் இருக்கிறது. கட்டப்பட்ட கற்களும் ஒரே தரத்தையும் ஒத்த காலத்தையும் கொண்டுள்ளன. கோயில் கட்டிய காலத்திலிருந்து தேவேந்திர குல வேளாளர் மடத்துப் பட்டக்காரர்கள் கோயிலில் எல்லா விழாக்களிலும் முன்னுரிமையும், முதல் மரியாதையும் பெற்று வந்துள்ளனர். முன்பு கோவில் நிர்வாகம் இவர்கள் முன்னோரிடமே இருந்தது. தமிழ் மன்னர் மரபினரின் ஆட்சி தமிழகத்தில் குறையக் குறையத் தேவேந்திர குல வேளாளர்களின் உரிமைகள் சிறிது சிறிதாகப்

பிடுங்கப்பட்டு வந்துள்ளனர்"[3] என்பார். இவரின் கருத்துப்படியும் இம்மக்களின் இன்றைய வாழிடங்களின் படியும் இம்மக்கள் நொய்யல் ஆற்றங்கரையின் பெரும்பகுதிகளின் உரிமையாளர் களாக இருந்து பின்னாளில் நிலங்களை இழந்து வாழ்கின்றனர் என்பதை அறிய முடிகின்றது. இருப்பினும் இம்மக்கள் தங்களின் முதன்மைத் தொழிலான வேளாண்மையை உயிர் மூச்சாகக் கொண்டு சிறிய அளவிலேனும் நிலங்களையுடைய பண்ணாடிகளாக வாழ்ந்து வருவதை இப்பகுதியில் காண முடியும்.

**நெல் வேளாண்மையும் தேவேந்திர குல வேளாளரும்**

இன்று தமிழகத்தின் முக்கிய உணவாகப் பயன்படும் நெல்லை இவர்களே கண்டுபிடித்ததாக பல தொன்மக் கதைகளும் (Myths) கல்வெட்டுக்களும் கூறுகின்றன. "பழனிப் பட்டயம் கூறியபடி சிவன், பார்வதியின் வேர்வைத் துளியிலிருந்து பிறந்த தேவேந்திரரின் மூதாதைதான் மேலோகத்திலிருந்து நெல் பயிரிடும் முறையைப் பூலோகத்திற்குக் கொண்டு வந்தார் என்று தெரிகின்றது"[4]. செங்கோட்டுப் பள்ளு நூல் தேவேந்திர குல முதல்வன் மூவேந்தர் வேண்டுகோளின்படி தேவலோகம் சென்று நெல் பயிரைக் கொண்டு வந்து பூமியில் பயிர் செய்ததாகக் குறிப்பிடும்[5].

இடைக் காலத்தைச் சேர்ந்த கரிவலம் வந்த நல்லூர்க் கல்வெட்டில் இம்மரபினர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியால் தேவலோகத்திலிருந்து செந்நெல், கன்னெல், கதலி, பனை முதலிய விதைகளுடனும் காளையுடனும் பூமிக்கு அழைத்து வரப்பட்டதாகவும் அவர்கள் ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகளைத் தோண்டி வேளாண்மை கண்டு நாட்டைச் செழிப்பித்ததாகக் கூறுகின்றன[6]. வரலாற்றறிஞர் கே.ஆர் அனுமந்தன் ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாக விவசாயத்தை விடாமல் செய்து வரும் ஒரே சமூகம் உண்டென்றால் அது பள்ளர்கள் தான் என்று கூறுவார்[7] நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது எனும் பழமொழியும் நெல் வேளாண்மையைப் போற்றுவதற்காக எழுதப்பட்ட பள்ளு இலக்கியங்களின் தலைமை மாந்தர்களாக இவர்களே இருப்பதும் நெல் வேளாண்மைக்கு உரியவர்கள்

இவர்கள் தான் என்பதைக் காட்டும். இதனாலேயே வேளாண்மையைச் சிறப்பிக்க எண்ணிய இறைவன் இறைவி மள்ளனாகவும், மள்ளத்தியராகவும் தோன்றியுள்ளனர் என்றும் கருதலாம்.

## இந்திரவிழா எனும் நாற்று நடவு உற்சவம்

இவ்விழா இரண்டு விழாவினைத் தன்னுள் கொண்டிருக்கின்றது. ஒன்று இந்திரவிழா மற்றொன்று மள்ளனாக மாறிய சிவபெருமானின் புராணக் கதையை மறுபடியும் நடித்துக் காட்டும் விழா. இந்திர விழா என்பது இம்மக்கள் பண்டைக் காலம் தொட்டு தமது முன்னோரான வேந்தனிடம் அதாவது மருதநிலக் கடவுளிடம் மழை வேண்டியும் பயிர்வளம் வேண்டியும் வழிபடும் வளமை வழிபாடாகும். நொய்யல் ஆற்றங்கரையில் இம்மக்களால் பெரும் விமர்ச்சியாகக் கொண்டாடப்பட்ட நாற்று நடவு எனும் இந்திர விழா பின்னாளில் சிவனுடன் தொடர்புபடுத்தப்பட்டு புராணச் சாயல் பெற்றது என்றும் கொள்ளலாம். நாற்று நடவுத் திருவிழாவைக் காண்பதற்கு முன்பு இந்திர விழா குறித்துச் சுருக்கமாகக் காண்போம்.

## இந்திர விழாவும் தேவேந்திரர்களும்

இந்திர விழா பழங்காலத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் எடுக்கப் பெற்ற தமிழர் தேசியத் திருவிழா ஆகும். அக்காலத்தில் இந்திரன் ஒரு பொதுத் தெய்வமாகக் கருதப்பட்டு இந்திர விழாக் கொண்டாடப்பட்டது. அவனை மேகவாகனன், மேக நிறத்தவன், கரியவன் என்றும் குறிப்பிட்டனர்[8].

இன்று இந்திரன் என்று சொன்னவுடன் நமக்கு நினைவுக்கு வருபவன் வேத கால இலக்கியங்களில் தொடர்புடைய இந்திரன் தான். ஆனால் ஆரியர்களின் வருகை தமிழகத்தில் ஏற்படுவதற்கு முன்னமே தமிழகத்தில் மருத நில ம்க்களான மள்ளர்களின் (உழவர்) தெய்வமாக விளங்கியவன் இந்திரன் என்பதை நாம் நினைய வேண்டும். மருத நிலத்தின் கடவுள் இந்திரன் என்பதைத் தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியலில் "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்று குறிப்பிடும். இங்கு குறிக்கப்படும் வேந்தனே தீம்புனல் நிலமான வயலும் வயல் சார்ந்த மருத நிலத்தின் கடவுள் ஆவான். வேத இலக்கியத்தில் குறிக்கப்படும்

இந்திரனும் மழைக் கடவுளே. இதனால் ஆரியர்களின் தமிழக வருகைக்குப் பின்னர் மழைக் கடவுளான மருதநிலக் கடவுள் வேந்தனும் ஆரியர்களின் மழைக் கடவுள் இந்திரனும் ஒன்றெனக் கருதப்பட்டனர் என்று மறைமலையடிகள் குறிப்பிடுவது இங்கு கருதத்தக்கது[9].

இந்து மதத்தில் பல தெய்வங்கள் ஒன்றுக்கொன்று உறவுடையது அல்லது ஒன்று என்று சொல்லப்பட்டாலும் அந்தந்த மண்ணுக்கேற்ற பண்பாட்டில் வளர்ந்த தெய்வங்கள், அந்தந்தப் பண்பாட்டையுடைய மக்களுடன் ஏதோ ஒரு வகையில் நெருங்கிய தொடர்புடையதாக விளங்கும். அவ்வகையில் தமிழகத்தின் மூத்த மருதநில உழவர் குடிகளான மள்ளர் எனும் தேவேந்திரர்களின் தெய்வமாக இந்திரன் (தேவேந்திரன்) விளங்குகின்றார் எனலாம். இம்மக்கள் தங்களின் நிலக்கடவுளான (முன்னோர்) வேந்தன் (இந்திரன்) பெயராலேயே தேவேந்திரர் என்றும் தங்களது வேளாண் தொழிலால் வேளாளர் என்றும் அறியப்படுகின்றனர். அவ்வகையில் பண்டை நாளில் இம்மக்களிடம் வழக்கிலிருந்த வேந்தன் வழிபாடே இன்று இந்திரவிழா எனும் நாற்று நடவுத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகின்றது என்றால் மிகையாது. மேலும் கோவை புலியகுளத்தில் அமைந்துள்ள மாரியம்மன் கோவிலில் இந்திரனுக்கொன்று தனிக் கோவில் அமைத்து இம்மக்கள் இந்திரவிழாவெனும் பெயரில் நடத்துவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

### நாற்று நடவு உற்சவம்

நாற்று நடவுத் திருவிழாவை இரண்டாகப் பிரிக்கலாம். அவை 1. நாற்றுவிடும் விழா 2. நாற்று நடவு விழா என்றவாறு அமைகின்றன. இவற்றை வருமாறு விளக்கமாகக் காணலாம்.

#### 1. நாற்றுவிடும் விழா

ஆனிமாதம் 18ம் நாள் தொடங்கி 27ம் நாள் வரை 10 நாட்கள் நாற்று நடவு விழா நடைபெறும். விழா தொடங்கும் முதல் நாள் நெல் நாற்றுவிடும் விழா நடைபெறுகின்றது. அதாவது முன்னமே தயார் செய்யப்பட்ட கழனியில் நெல் விதைகளைப் பரவுதல் நாற்றுவிடும் உற்சவம் என்று பெயர் பெறுகின்றது.

கோவிலுக்கு முன்பு உள்ள தேவேந்திரர் சமூக மடத்திற்குப் பின்புறமுள்ள வயலில் முன்பு இந்நாற்று விடும் சடங்கு நடத்தப்பட்டது. இப்பொழுது மடத்திற்குள்ளேயே கழனிசெய்து அதில் நாற்றுவிடுகின்றனர். ஆனி 18ம் நாள் தேவேந்திரர் மடம் அலங்கரிக்கப்பட்டு, மேள தாளங்களுடன் விழாக்கோலம் பூணுகின்றது. கோவையைச் சேர்ந்த நான்கு வம்சப் பட்டக்காரர்களும் அதாவது கொங்குத் தேவேந்திர பட்டக்காரர் வெள்ளலூர் இருஷ்னை பட்டக்காரர், சோழியத் தேவேந்திர பட்டக்காரர் செல்வபுரம் பி.கே.நடராசப் பட்டக்காரர், பாண்டிய தேவேந்திர பட்டக்காரர். இருகூர் டி.நடராசப் பட்டக்காரர், கடையத் தேவேந்திரர் பட்டக்காரர் கோதவாடி மணிவாசகம் பட்டக்காரர்கள் தலைமையில் இவர்களின் சமூக ஆட்சிக்கு உட்பட்ட 40 ஊர்களைச் சேர்ந்த பண்ணாடிகளும் தேவேந்திர மக்களும் திரளாகக் கலந்து கொள்கின்றனர்.

பட்டீஸ்வரர் அலங்கரிக்கப்பட்டு இம்மடத்திற்கு அழைத்து வரப்படுகின்றார். மேலும் ஐராவதம் எனும் இந்திரனின் வாகனமாகக் கருதப்படும் கோவில் யானையும் மண்டபத்திற்கு அழைத்து வரப்படுகின்றது.

பட்டக்காரர்களுக்கு யானை மாலை போட கோவில் நிர்வாகத்தவர்கள் பட்டக்காரர்களுக்கு புத்தாடை அளித்து பட்டம் கட்டி மரியாதை செய்கின்றனர்.

கோவில் அர்ச்சகர்கள் முன்னமே ஊற வைத்துள்ள நெல் விதைக்கும் வயலுக்கும் பூசை செய்த பின்னர் பட்டக்காரர்கள் நால்வரும் நெல் விதையை வயலில் பரவுகின்றனர். இதன் பின்னர் பெண்கள் கும்மிப்பாடல்கள் பாடி கும்மியடிக்கின்றனர்.

இவ்வாறு பரவப்பட்ட நெல் விதைக்கு 9 நாட்களும் கோவில் அர்ச்சகர்கள் காலை, மாலை இருநேரமும் தண்ணீர்விட்டு பூசை செய்து வழிபாடாற்றுகின்றனர். இது அம்மன் வழிபாட்டில் முளைப்பாலிகைக்கு பூசை செய்து வழிபாடாற்றுவதை நினைவுபடுத்தும்.

நெல் பரவுதல் முடிந்தவுடன் முதல் நாள் விழா முடிவடைகின்றது. இவர்கள் நெல் விதையை விதைத்த

பின்புதான், இப்பகுதியிலுள்ள உழவர்கள் நெல் விதை விதைப்புச் செய்வார்கள் என்றும் தெரிகின்றது.

2. நாற்று நடவு விழா

ஆனி 18ம் நாள் தொடங்கிய இவ்விழா ஆனி 26ம் நாள் அதாவது 9ம் நாள் நாற்று நடவுத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகின்றது. இவ்விழாவினை ஆனி உற்சவம், நாற்று வெள்ளி என்ற இந்திரவிழா என்றும் நாற்று நடவு உற்சவம் என்றும் பல பெயர்களில் அழைக்கின்றனர். இவ்விழா கோவிலின் வாயிலின் தெற்குப் புறமுள்ள நாற்று நடவு மண்டபத்தில் நடைபெறுகின்றது. இம்மண்டபம் கோவில் கட்டப்பட்ட சோழர் காலத்திலேயே கட்டப்பட்டதாகும். இதனை 1882ம் ஆண்டு கல்வெட்டின்படி சுப்பரமணிய முதலியார் புதுப்பித்துத் தந்ததாகத் தெரிகின்றது. தற்போது இம்மண்டபம் முதலியார் சமூகத்தவர்களாலே பராமரிக்கப்பட்டு வருகின்றது. இம்மண்டபத்தில் நாற்று நடவு விழா நடை பெறுகையில் இம்மண்டபத்தார் பட்டக்காரர்களுக்குப் புத்தாடை எடுத்துக் கொடுக்கும் வழக்கமும் இருந்து வருகின்றது.

இவ்விழாவில் கலந்து கொள்ள நான்கு பட்டக்காரர்களின் சமூக ஆட்சிக்கு உட்பட்ட 40 கிராம மக்களும் வருகின்றனர். தேவேந்திர மடத்திலிருந்து இம்மக்களையும் பட்டக்காரர்களையும் வரவேற்க கோவில் நிர்வாகத்தவர்கள் யானையுடன் வருகின்றனர். பட்டீஸ்வரரும் அலங்கரிக்கப்பட்டு ஊர்வலமாக எடுத்து வரப்படுகின்றார்.

இங்கு பட்டக்காரர்களுக்கு கோவில் நிர்வாகத்தவர்கள் பட்டம் கட்டிவிட்ட பின்னர் காணிக்கையாக ரூ.150ம் தருகின்றனர். இதன் பின்னர் பட்டீஸ்வரருக்குப் பூசை நடைபெறுகின்றது. இவ்வாறு ஏர்பூட்டிய எருதுகளுடன் பட்டக்காரர்கள் நாற்று நடவு மண்டபத்திற்கு அழைத்து வரப்படுகின்றனர். நாற்றுக்களைப் பறித்து கட்டுக்களாக்கி பார்வதி வேடமிட்ட மள்ளர் பெண்கள் கையிலேந்தி வருகின்றனர்.

தேவேந்திர மடத்திலிருந்து நாற்று நடவு மண்டபத்திற்கு ஏருடன் வரும் பட்டக்காரர்களைப் பட்டீஸ்வர மன்னராகவே மக்கள் கருதி வழிபடுகின்றனர். இவ்வழிபாட்டில் அனைத்து இன

மக்களும் பெரும் திரளாகக் கலந்து கொண்டு இறைவனின் அருள் பெறுவது இவ்வழிபாட்டின் சிறந்த அம்சமாகும்.

இவ் ஊர்வலத்தின்போது தேவேந்திர குல ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் பட்டீஸ்வரர், பச்சைநாயகி, தேவேந்திரர், இந்திராணி, விநாயகர், முருகன், இலக்குமி, சரஸ்வதி, திருமால் போன்ற வேடமிட்டுக் கலந்து கொள்கின்றனர். மேலும் இவ்வேடமிட்டுள்ளவர்களை வண்டியில் வைத்து அழைத்து வருவதும் உண்டு.

பெண்கள் முளைப்பாலிகைகளைத் தலையில் சுமந்தவாறு கும்மிப்பாடல்கள் பாடிக் கொண்டு வருகின்றனர் இக்கும்மிப்பாடல்கள் இந்திர விழாப் பாடல்கள் என்று இவர்களால் அழைக்கப்படுகின்றன.

ஆண்கள் வீரவிளையாட்டுக்களான வாள்சண்டை, வேல் சண்டை, சிலம்புச் சண்டை, சுருள்கத்திச் சண்டை, மல்யுத்தம், புலிவேடம் போன்ற வீரக்கலைகளை நிகழ்த்திக் காட்டியவாறு வருகின்றனர்.

இறைவர்கள் வேடமிட்ட மக்களும் கும்மிப்பாடல்கள் பாடிக்கொண்டு முளைப்பாலிகைகளைச் சுமந்து செல்லும் பெண்களும் வீர விளையாட்டுக்களை நிகழ்த்தும் மள்ளர்களும் ஊர்வலமாகச் செல்ல இவர்களின் முன்னே பட்டக்காரர்கள் செல்ல அவர்களுக்கு முன்னே யானையும் பட்டீஸ்வரரும் அழைத்துச் செல்லப்படுகின்றனர். இவ்வாறான விழாக்கோலம் தேவர்கள் ஒன்று கூடி நாற்று நடவு செய்யும் காட்சியைப் பார்ப்போர்க்கு உண்டாக்கும்.

இவ்வூர்வலம் நாற்று நடவு மண்டபத்தை அடைந்தவுடன் பட்டீஸ்வரருக்கும் நெல் நாற்றுக்கும் பூசை செய்த பின்னர் பட்டக்காரர்கள் பட்டீஸ்வரராக மாறி வயலில் இறங்கி ஏர் உழும் வேலையில் ஈடுபடுகின்றனர். தெய்வ வேடமிட்ட பெண்கள் நாற்றுக்களை நடுகை செய்கின்றனர். இச்சமயம் வயலிலுள்ள சேற்றினையும், கேலி உறவுடையவர்கள் ஒருவரின் மேல் ஒருவர் எறிந்து கொண்டு விளையாடும் வயல் களியாட்டமும் உண்டு. பார்வதியாக வேடம் புனைந்தவர் பட்டக்காரர் வடிவில் இருக்கும் பட்டீஸ்வரரின் மேல் கட்டாயம் சேற்றை வாரி இறைக்கின்றார்.

இச்சமயம் இந்திர விழாப் பாடல்கள் பெண்களால் பாடப்படுகின்றன.

முற்காலத்தில் பொன்னால் ஆன நெல் நாற்றுக்களையே முதலில் நடுகை செய்தனர் என்றும் இப்பொழுது வெள்ளியால் ஆன நாற்றுக் கட்டுக்களால் நடுகை செய்த பின்னரே, நெல் நாற்றுக்களை நடுகை செய்யும் வழக்கம் காணப்படுகின்றது.

இவ்வாறு நடவு செய்த விளைச்சலில் கிடைக்கும் நெல்லை பங்குனி உத்திர திருவிழாவின் போது பொங்கல் வைத்து பட்டீசுவர மன்னருக்குப் படையல் வைத்துப் பூசை செய்து பிரசாதமாக அனைவருக்கும் கொடுக்கின்றனர். இந்நெல் விளைந்தவுடன் நெல் கதிர்களால் பூரண கும்பம் போல் செய்து பட்டீஸ்வரரின் தலைக்கு மேல் தொங்கவிட்டிருப்பது மிகச் சிறப்பிற்குரியது. வேளாண்மை செய்யும் மன்னராகத் தோன்றியதால் இங்குள்ள சிவன் மண்வெட்டியுடனும் பார்வதி கையில் நாற்று முடியுடன் பச்சையாடை அணிந்து பச்சைநாயகியாகவும் காட்சி தருகின்றார்.

கோவைப் பகுதியில் வாழும் தேவேந்திர மக்கள் பெயர்களில் மல்லையப்பன் (உழவர் தலைவன்) மருதப்பன் (மருதநிலத் தலைவன்) மருதாயி (மருதநிலத்தின் தாய்) பச்சையம்மாள் பச்சைநாயகி (வளமையின் அதாவது பயிர்களின் தலைவி) மள்ளி (உழத்தி) என்றெல்லாம் இவ் இறைவர்களின் பெயர்களைக் காணமுடியும். மேலும் இம்மக்கள் தங்களது வேளாண் நிலங்களில் அறுவடையின் போதும், வேளாண்மைத் தொடக்கத்தின் போதும் வழிபடும் மல்லாண்டசாமி, மல்லாண்டை வழிபாடும் இவர்களின் வேளாண் வழிபாட்டுடன் தொடர்புடைய வளமை வழிபாடே ஆகும்.

### நாற்று நடவு விழா தரும் உண்மைச் செய்தி

தமிழகத்தில் இன்று நெல் வேளாண்மையில் பல சமூகத்தவர்கள் ஈடுபட்டிருந்தாலும் வேளாண்மை குறித்த பல்வேறு தொன்மங்களும் இலக்கியங்களும் (பள்ளு இலக்கியம்) தேவேந்திர குல மக்களைச் சுற்றியே எழுந்திருப்பதை நாம் இங்கே நினைய வேண்டும். நாற்று நடவுச் சடங்கின் உண்மைக் கூறினைத் தெரிய இதை நடத்தும் மக்களின் சமுதாய அமைப்பைத் தெரிந்து

கொண்டாலொழியஇச்சடங்கின் செயற்பாட்டினை (Function) நாம் புரிந்து கொள்ள முடியாது. "அனைத்துப் பண்பாட்டுக் கூறுகளும் செயல் தன்மை வாய்ந்தவையாக உள்ளன. செயல் தேவைகளின் அடிப்படையில் நிகழ்கின்றது. தேவைகளின் மறுவடிவமே பண்பாட்டுக் கூறுகள். இவை பண்பாட்டில் சட்டென ஏற்பட்டு உடன் மறைந்து விடுவதில்லை. பண்பாட்டின் வழக்காறுகளை, நெறிமுறைகளை (Norms) காலங்காலமாகச் சுமந்து செல்கின்றன, முழுமையின் செயலுறவுகளை வெளிக்காட்டுகின்றன. ஆகவே செயலைப் புரிந்து கொண்டால் முழுமையைப் புரிந்து கொள்வதில் ஒரு திறவுகோலைப் பெற்றவர்களாவோம். ஒவ்வொரு செயலும் பண்பாட்டில் எந்தெந்தக் கூறுகளோடு தொடர்புற்று நிகழ்கின்றது என்றும் எதற்காக நிகழ்கின்றது என்றும் அறிந்து கொண்டோமானால் அதன் நிலைபேறுடைமைக்கான காரணத்தை அறிந்தவர்கள் ஆவோம் என்று மானுடவியல் அறிஞர் மாலி னோஸ்கி (Malinowski)"[10] குறிப்பிடுவதற்கேற்ப இம்மக்களிடம் வழக்கிலுள்ள நாற்று நடவுத் திருவிழாவை இம்மக்களின் வேளாண் மரபுடனும், சங்க கால மள்ளர் மரபுடனும் நாம் தொடர்புபடுத்தினால் மட்டுமே இச்சடங்கிற்கான நிலைபேறுடைமையை அறிய முடியும்.

கொங்கு நாட்டில் இம்மக்கள் நிகழ்த்தும் நாற்று நடவுச் சடங்கு போன்றே தமிழகம் முழுவதும் இம்மக்கள் வெவ்வெறு பெயர்களில் நடத்துகின்றனர். இராஜபாளையம் பகுதியில் ஏர்த் திருவிழாவென்று ஆடி மாதத்திலும், தாராபுரம் வட்டாரத்தில் பொன் ஏர் பூட்டுதல் என்று ஆடி மாதத்திலும் நடத்துகின்றனர். ஆடி மாதத்தில் பொன் ஏர் பூட்டுதல் விழா எல்லா இடங்களிலுமே நடைபெறுகின்றது. பழனியில் வாழும் தேவேந்திரர்கள் இவ்விழாவை அதாவது நாற்று நடுதல் முதல் அறுவடை வரை பள்ளு நாடகம் எனும் பெயரில் விழாவாக நடித்துச் சடங்கு செய்வதாக பேராசிரியர் சுப்பிரமணியன் குறிப்பிடுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பழனி நகரில் மாரியம்மன் கோவிலுக்கு எதிரே வாழும் பள்ளர் இன மக்கள் தங்கள் குல தெய்வ விழாவின் போது "பள்ளு நாடகத்தைப்" பாவனையால் நடித்துக் காட்டியதைக் கள ஆய்வின் போது காண முடிந்தது. கோவிலுக்குமுன் கதிர்

அறுத்தல், கதிருக்கு காவலிருத்தல், தாம்படித்தல், மீன்பிடித்தல் முதலிய செயல்களைப் பாவனையால் செய்கிறார்கள். கோவிலின் முன் ஒரு சிறிய வைக்கோல் போர், நெற்கதிர் இவற்றைக் குவித்து வைத்திருந்தனர். குளம் ஒன்றை அமைத்து அதில் தண்ணீர் நிறுத்தி வைத்திருந்தனர். மீன்பிடிக்கும் வலை, கூடை, முறம் முதலியவற்றையும் வைத்திருந்தார்கள். காவலாளிக்கு ஒரு சிறு பரண் அமைத்திருந்தார்கள். ஆண்டுதோறும் குல தெய்வ விழாவின் போது இந்நாடகத்தை நடித்துக் காட்டுவோம் என்று பெண்கள் பலர் ஆய்வாளரிடம் தெரிவித்தனர்"[11] என்ற செய்தி யிலிருந்து வேளாண் மரபுடைய இம்மக்கள் தமது வேளாண் பண்பாட்டினை விடாது போற்றிப் பாதுகாக்கும் முறையில் இந்நாடகத்தை நிகழ்த்துவதாகவே கொள்ள முடியும்.

இதே போன்றுதான் தங்களது குலத்தில் தோன்றி திருவிளையாடல் நடத்திய இறைவனின் திருவிளையாடலை அதாவது புராணக்கதையை மறுபடியும் நிகழ்த்திக்காட்டும் (Ritual was the enactment of myth) சடங்கினை நாற்று நடவுத் திருவிழாவாக இம்மக்கள் நிகழ்த்திக் காட்டுகின்றனர். இம்மக்களிடம் இச்சடங்கு நிலைபெறடையக் காரணம் நெல் வேளாண்மையும் மருதநில மள்ளர் (உழவர்) மரபும் இவர்களுடையது என்பதாலேயே ஆகும் என்றும் கருதலாம். மேலும் வேளாண்மை செய்ய விரும்பிய பட்டீஸ்வரர் தங்களது இனத்தில் தோன்றினார் என்ற ஐதிகத்தினை விடாமல் காப்பதற்காகவும் ஆகும்.

## மழை வளமை வேண்டும் விழா

நாற்று நடவு விழா மழை வேண்டுதலையும், வேளாண்மை வளமை வேண்டுதலை நோக்கமாகக் கொண்டுள்ளது. இதனைத்தான் சிலப்பதிகாரம் "பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளனும் சுரக்க" என்று இந்திரனை வேண்டுவதாகக் குறிப்பிடும். இங்கு பேரூர்க் கோவிலில் இந்திர விழா எனும் நாற்று நடவு உற்சவத்தில் பாடும் பாடலிலும் மழை வேண்டுதல் வருமாறு வர்ணிக்கப்படுகிறது.

"மாமலையெல்லாம் தண்ணீர்வர தன்டொதுங்கி
தனிர் ஒதுங்கி வருகுதாம் காவேரி

என்றும்

ஊசிபோல் மின்னல் மின்னி
உத்திரம் போல் கால்இறங்கி
பாசிபோல் மின்னல் மின்னி
பத்துத்துளி துளித்து வருகுதாம் காவேரி"[12]

என்றவாறும் பாடப்படும் மழை வேண்டும் பாடலில் மழை வருகை பாண்டிய மன்னனுக்காக வருவதாகவும்

" வருகுதாம் காவேரி
ஆறால் மீன் திறக்க
வருகுதாம் காவேரி
யாருக்குன்னு வாய்திறக்க
பட்டுக் கொடை பிடிச்ச
பாண்டியராசனுக்கு வாய்திறக்க"[13]

என்றவாறும், பாண்டிய மன்னனின் முன்னோரான தேவேந்திரனுக்காகவும் என்றவாறு

"சன்னலுக்கு நீர்போக்கி
என்தேவ தேவேந்திரனுக்கு
வாய்திறப்பேன்"[14]

என்று பாடப்படும் பாடலில் தேவேந்திரனுக்காக மழைவரும் என்று வருணிக்கப்படுவதைப் பார்க்க முடியும். இதன் பின்னர் வயலில் உழவு செய்து தொளி கலக்குதல் வருணிக்கப்படுகின்றது.

"சந்தனக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
சாதிலிங்க நாத்தெடுத்து பள்ளி நடுவாள்
குங்குமக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
குபேந்திரன் நாத்தெடுத்து பள்ளி நடுவாள்"

இப்பாடலில் நெல் நாற்று லிங்கமாக அதாவது சிவனாகவும் (சாதிலிங்க நாத்து) தேவேந்திரனாகவும் (குபேரன் நாத்து) வருணிக்கப்படும் சிறப்பைக் காணமுடியும். கடவுளர்களையே நெல்நாற்றாகக் கருதி வருணிக்கும் மரபு இம்மக்கள் பாடலில் மட்டுமே காணமுடியும். அதிலும் தமது குலதெய்வமான இந்திரனையும் நெல் நாற்றாகக் கருதும் மரபு போற்றுதற்குரியது ஆகும்.

நாற்று நடவுத் திருவிழாவின் போது பாடப்படும் பாடல்களும் இவ்விழாவில் கலந்து கொள்ளும் மக்கள் செய்து காட்டும் நாற்று நடவு, தண்ணீர் பாய்ச்சுதல், அறுவடை, தாம்படித்தல், வைக்கோல்ப்போர் செய்தல் முதலிய சடங்கியல் செயல்கள் அனைத்தும் ஒரு வேளாண் திருவிழாவை நமக்கு நாடகமாக்கிக் காட்டும் தன்மையதாய் அமையும்.

## மருத நிலத்தின் பண்டைய வேளாண் விழா

நாற்று நடவுச் சடங்கு இந்திரவிழா என்று அழைக்கப்படுவதும் ஐராவதம் என்னும் பெயருடைய கோவில் யானை தவறாது இவ்விழாவில் இடம் பெறுவதும் மழை வேண்டியும் பயிர் வளம் வேண்டியும் இவ்விழா அமைவதும் மருதநில மக்கள் பண்டை நாளில் நடத்திய இந்திர விழாவென்று இவ்விழாவைக் கருத இடமுண்டு. இவ்விழாவில் பாடப்படும் கும்மிப் பாடல்களில்

"சந்திரரே சூரியரே சாமி பகவானே
இந்திரனை நோக்கி எடுத்தேன் இளமுடியை"

என்றும்

"தேவேந்திரர்கள் எல்லாம் சேரக்குலவையிடுங்கள்
தேவேந்திர ராஜனுக்கு
யானையின்னா யானை ஐராவதத்து யானை
பள்ளத்தைக் கண்டால் பதுங்குமாம் அந்த யானை
பட்டுக்கொடை பிடிச்சு நம்ம பாண்டியராஜா
பயிர் பார்க்க வாராங்க
நீலக்கொடை பிடிச்சு
நிலம் பார்க்க வாராங்க
பொன்னு மிதியடியை காலிலே தொட்டு
மதுரை பெத்த ராசா குதிரை பெத்து வாராங்க"(15)

இங்கு இடம் பெற்றுள்ள பாடலடிகளில் தேவேந்திரர்களின் தெய்வமான இந்திரனை வணங்கி தேவேந்திரர்கள் உழவு வேலையைத் தொடங்குவதாகவும் அச்சமயம் இந்திரன் யானையின் மீது பவனி வருவதாகவும் வர்ணித்துவிட்டு இவ்வாறான இந்திர மரபில் வந்த பாண்டிய மன்னன் வேளாண்மை நிலங்களைப் பார்க்கக் குதிரையில் வருவதாக இப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. ஐராவதம் எனும் யானை இந்திரனின் வாகனமாகும். இந்திரனைப்

பாண்டிய மன்னன் என்று விழிப்பதன் மூலம் இந்திரன் (வேந்தன்) வழிவந்தவர்களே பாண்டிய மன்னர்கள் என்பது பெறப்படும். ஆக இவ்விழா மருதநில மக்களான மன்னர்களால் அவர்களது குல முன்னோரான வேந்தனிடம் வேளாண்மையும் மழையும் வேண்டி வழிபட்ட வேந்தன் வழிபாடாகவும் அமைந்து காணப்படுகின்றது.

## தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு

சித்திரைத் திங்களில் சித்திரை விண்மீனொடு கூடிய முழுநிலவு நாளில் (சித்திரா பௌர்ணமி) இந்திர விழாக் கொண்டாடப்படும்[16] சிலப்பதிகாரத்தில் இந்திரன் கோயில் "இந்திரக் கோட்டம்" என்று குறிக்கப்படும். அதே போன்று நிலவு வழிபாட்டை "நிலாக் கோட்டம்" (சிலம்பு, இந்திர விழாவூரெடுத்தகாதை பாடல்வரி - 13) என்றும் குறிப்பிடும். இந்த இரண்டு வழிபாட்டையும் குறிக்கும் வழிபாடே தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடும் நிலாப் பிள்ளை வழிபாடும் ஆகும் எனலாம். இதனை வருமாறு காணலாம்.

'இந்திரனின் மனைவி இந்திராணி; ஊர்தி ஐராவதம் என்னும் வெள்ளை யானையாகும். இந்து என்ற (ஒய்க்ன்) சொல்லில் இருந்தே இந்திரன் என்ற பெயர் பிறந்தது. இந்து என்றால் மழையைத் தருபவன் என்பது பொருள். வறட்சியைப் போக்கி உயிர் இனங்களுக்கு மழையைத் தருவித்துச் செழிப்பை உண்டாக்குபவன் என்று இந்துக்கள் இந்திரனைக் கருதுகின்றனர்[17]. இதன்படி வேந்தன் வழிபாடு மறைந்து இந்திர வழிபாடு என்று சிறப்புற்று அதுவும் மறைந்து போயின. அதன் பின்பு தோன்றிய விநாயகர் அதாவது பிள்ளையார் வழிபாடு இந்தியாவில் பல்வேறு விதத்தில் வளர்ச்சி பெற்றது. மழை கொடுக்கும் கடவுளாகக் கருதப்பட்ட இந்திரன் இருந்த இடத்தை பின்னாளில் தோன்றிய பிள்ளையார் வழிபாடு கைப்பற்றியது. ஆற்றோரங்களிலும் குளத்துக் கரையோரங்களிலும் பிள்ளையார் இடம் பெற்றார். மழை வேண்டி பிள்ளையாருக்கு மழைக்கஞ்சி காய்ச்சி ஊற்றும் வழக்கமும் தோன்றியது. மழை இல்லாத காலங்களில் வறண்டு கிடக்கும் குளத்திற்குள் பிள்ளையார் சிலையைத் தூக்கிப் போட்டு பின்பு குளம் நிரம்பியதும் எடுத்துக் கொள்ளும் வழக்கமும் இந்துக்களிடம் ஏற்பட்டது. இவ்வாறான

செல்வாக்கு பிள்ளையாருக்கு வந்ததும் அதனை மழை கொடுக்கும் தேவேந்திரனுடன் சேர்த்து தேவேந்திரப் பிள்ளையார் என்று வைத்து வழிபடுகின்றனர். ஆனால் இங்கு வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு மருதநில மக்கள் வழிபடும் வேந்தன் (இந்திரன்) வழிபாடே ஆகும். இத்தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடுகள் ஒரு சில பன்னூ நூல்களிலும் குறிக்கப்படுகின்றன.

மழை கொடுக்கும் தெய்வம் என்பதோடு மட்டுமல்லாமல் பிள்ளையார் அதாவது விநாயகர் தேவேந்திரனின் வாகனமாகிய ஐராவதம் எனும் யானை வடிவ உருவமுடையவனாகவும் இருப்பதால் மிக எளிதாக தேவேந்திரன் வழிபாட்டுடன் பிள்ளையார் வழிபாடு இணைந்திருக்க வாய்ப்புண்டு. இன்றும் கோயமுத்தூர் பேரூர் பட்டீஸ்வர மன்னார் கோயிலில் நடைபெறும் இந்திர விழாவில் தேவேந்திரனின் வாகனமாகிய யானை தவறாது ஊர்வலத்தில் கலந்து கொள்வதைக் கூறமுடியும். இதல்லாமல் இம்மக்கள் வயல்களில் வழிபாடாற்றும் போது கிழக்கு திசையிலி ருந்தே வழிபாடு செய்கின்றனர். "கிழக்கு திசைக்கு காவலன் மருதநிலக் கடவுளான இந்திரன்"[18] என்பதை இங்கு நினையலாம்.

### தேவேந்திரப் பிள்ளையார் வழிபாட்டு முறைகள்

நெல் நாற்றை நடும் போது மாட்டுச் சாணியில் பிள்ளையார் செய்து அதில் அருகம்புல்லைச் சொருகி வைத்து வழிபடுகின்றனர். இது ஒரு வகை வள வழிபாடாகும். இத்தெய்வத்தைத் தேவேந்திரப் பிள்ளையார் என்றே இம்மக்கள் அழைக்கின்றனர். இத்தெய்வத்திற்கு வயலுக்குள்ளேயே இலை, தழைகளாலும், பசுங்குச்சிகளாலும் கோயில் அமைக்கின்றனர். இதே போன்று மன்னார் சாமி எனும் பெயரில் பாரியூர் அம்மனுடன் தொடர்பு படுத்தப்பட்ட மன்னார் கோயிலில் வாழை இலை, மற்றும் தென்னை ஓலை, பசிய குச்சிகளால் பந்தலிட்டு வழிபடுவதைக் காண முடிந்தது. மேலும் இம்மக்கள் வயலில் ஒரு கல்லை எடுத்து வைத்து அதற்கு மல்லாண்டை எனும் பெயர் சூட்டி இலை, தழைகளால் பந்தலிட்டு மல்லாண்டைக்கு கோயில் அமைத்து வழிபடுவதையும் காணமுடிகின்றது. இவ்வகையில் வழிபடப்படும் தேவேந்திரப் பிள்ளையார், மன்னார்சாமி, மல்லாண்டை ஆகியன வயலைக் காக்கும் வேந்தனின் நினைவாக வழிபடப்படும் வள வழிபாடே

ஆகும். இவ்வழிபாட்டின் போது பாடப்படும் பாடலும் இதனை உறுதி செய்யும்.

"பிள்ளையார் பிள்ளையார் தேவேந்திரப் பிள்ளையார்
ஒடு போட்டு மேஞ்சாலும் ஒழுகுதும்பார் பிள்ளையார்
வாழைப் பூக் கொண்டு வந்து வடபுறமா மேயலாம்
தென்னம் பூக் கொண்டு வந்து தென்புறமா மேயலாம்"

என்றவாறும்[19]

"நாலு மாட்டுச் சாணியெடுத்து
நாலு சதுரம் வடித்து
நடுவே ஒரு பிள்ளையாரை நாயகமாய் வைத்து"

என்றும்

ஒரு முத்தின தேங்காய் உடைத்து
முன்னால் வைத்து
சீப்போட வாழைப்பழம் எடுத்து
முன்னால் வைத்து

என்றும்

"ஒரு சோட்டுப் பெண்களெல்லாம்
ஒத்த கும்மி யடித்து"

என்றவாறும் பாடும் பாடல் வரிகள் பிள்ளையாருக்கு உருவம் அமைத்து இழை தழைகளால் பந்தல் போட்டு பெண்கள் கும்மியடித்து வழிபடுவதனைக் காட்டும்.

"ஒரு மொழசாங் கணபதியா ஒன்னாலாயிரம் - சரவிளக்காம்
சரவிளக்கத் திண்டிவிட்டு சரணம் எங்கும் - பொழுதுழுகும்
பொழுதுழுகுங் கெங்கையிலே பெண்களெல்லாம் - நீராடி
நீராடி நீர்குளிச்சு நீலோ வர்ணப் பட்டுடுத்தி
பட்டுடுத்தி பவுனுடுத்தி பருஞ்சி கப்பல் தேர்ப்பூட்டி
தேருக்குள்ள பூதாம தேர்முழி பொங்கல் வைக்காம
பொட்டுவெச்சு பூ முடிஞ்சு போறையே பிள்ளையாரே" [20]

இப்பாடல் பெண்கள் ஆற்றில் நீராடிவிட்டு பட்டுச்சேலை அணிந்து தேவேந்திரப் பிள்ளையாரை மழைவேண்டிக் கும்மியடித்துப் பாடுவதாகத் தெரிவிக்கின்றது. கும்மி முடிவில் பிள்ளையார் ஆற்று வெள்ளத்தில் போவதாக இப்பெண்கள் கற்பனை செய்கின்றனர். "கப்பல் தேர்ப்பூட்டி" என்ற வரியை

நோக்க கடலில் நீரை உழுவது போன்று செல்வது கப்பல் ஆகும்.

அதே போன்று வயலில் நீர் நிறைய வேண்டும் எனும் உள்ளக் கிடக்கையை இம்மருதநில உழத்தியர்கள் வெளிப்படுத்துகின்றனர். இவ்வள வழிபாடு மழையின் மக்களாகிய தேவேந்திரர்களிடம் மட்டுமே இருப்பது மருதநில வேந்தன் வழிபாடே என்பதை உறுதிப்படுத்தும்.

## நிலாப் பிள்ளை வழிபாடு

சிலப்பதிகாரத்தில் 'இந்திரக் கோட்டம்' என்று இந்திரன் கோயில் குறிக்கப்படுவது போன்று 'நிலவை' வழிபடும் கோயில் "நிலாக் கோட்டம்" என்று குறிக்கப்படுவதைக் காண்கின்றோம். இன்றும் மதுரை மாவட்டத்தில் இம்மக்கள் வழிபடும் தெய்வங்களுக்குக் கிரீடத்தில் பிறை காணப்படுகிறது. பிறந்த குழந்தையைப் பௌர்ணமி அன்று வீதிக்குக் கொண்டு வருகிறார்கள். இரவில் நிலவு வரும் பொழுது கரங்குவித்து வணங்கி வரவேற்கும் பண்பும் தேவேந்திரர்களிடம் காணப்படுகின்றது. இவ்வழக்கங்கள் பிறை வழிபாட்டின் அடிப்படைகளாக அமைந்துள்ளன"[21]. என்று வீ. ஐயனார் குறிப்பிடுவதிலிருந்தும் கொங்கு நாட்டில் இம்மக்களிடையே காணப்படும் 'நிலா' வழிபாட்டிற்கும் இம்மக்களுக்கும் நெருங்கிய தொடர்பிருப்பதை அறியலாம். இதனை தேவநேயப் பாவாணர் வருமாறு குறிப்பிடுவார்.

"சிற்றொளி வீசுதல் தவிர வேறொரு தன்மையுஞ் செய்யாவிடினும், வேனிற்கால வெப்பந்தாங்க முடியாது வருந்திய மாந்தர், தண்ணொளி வீசும் திங்களையும் போற்றினார். 'பிறை தொழுகென்றல்' என்னும் அகப்பொருட்டுறை, திங்கள் வணக்கம் தொன்று தொட்டு நிகழ்ந்து வந்தமையைக் காட்டும். காவிரிப் பூம்பட்டினத்தில் திங்கட்கும் கோயிலிருந்தது. இளங்கோவடிகளும், "திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்" என்று மங்கல வாழ்த்துப் பாடினார்.

பண்டைத் தமிழக முப்புலங்களுள், தென்புலமென்னும் பாண்டிநாடு வெப்பமிக்கிருந்தனால், பாண்டியன் திங்களைத் தன் குல முதலாகவும், குணபுலமென்னும் சோழ நாடு பனிமலை வரை தொடர்ந்து வெப்பங் குன்றியிருந்ததனால், சோழன்

கீழ்த்திசையில் எழும் கதிரவனைத் தன் குலமுதலாகவும்; குடபுலமென்னும் சேரநாடு நாள்தோறும் பெருமழை பொழியும் குடமலைத் தொடரைக் கொண்டிருந்ததனால், சேரன் தீயைத்தன் குல முதலாகவும் கொண்டிருந்தனர். மூவேந்தர் குடிக்கிளைகளே, வட நாவலம் ஆரிய நாடாக மாறிய பின், "சந்திரவம்சம், சூரியவம்சம், அக்கினிவம்சம்' எனப்பெற்றன"[21] என்பார். இக்கருத்திலிருந்து மூவேந்தர் மரபுடன் தொடர்புடைய வேந்தன் வழிபாட்டுடன் தொடர்புடைய வழிபாடே திங்கள் வழிபாடு அதாவது நிலா வழிபாடு எனலாம். இதனை மதுரை மாவட்ட இம்மக்கள் வழியாகும். தெய்வங்களின் கிரீடங்களில் பிறை காணப்படுவதாகக் குறிப்பிடும் வீ. ஐயனார் கருத்தும் உறுதிப்படுத்தும்.

### திங்கள் வழிபாடு வேளாண் வள வழிபாடே

கொங்குநாட்டில் ஈரோடு மாவட்டத்தில் இவ்வழிபாடு நடைபெறுகின்றது. இந்நிலா வழிபாடு அறுவடை முடிந்ததும் தேவேந்திர குல பெண்களால் கொண்டாடப்படுகின்றது. ஒரு சிறுமியை நிலாப் பெண்ணாக ஒப்பனை செய்து பச்சைப் பந்தலின் கீழ் அமர்த்துகின்றனர். வளர்பிறை நாளில் தொடங்கி நிலாப் பிறைக்கு கும்மியடித்து வழிபாடு செய்கின்றனர். பௌர்ணமி அன்று சிறப்புப் பூசைகள் நடைபெறுகின்றன. வாத்தியக் கருவிகள், கொட்டு மேளங்கள் முழுங்க தாசர் சங்கு சேகண்டி இசைக்க இவ்வழிபாடு நடைபெறுகின்றது. இவ்வழிபாட்டில் தேவேந்திர குலப்பெண்கள் முளைப்பாலி கைகளை ஊர்வலமாக எடுத்து வருகின்றனர். விழா முடிவில் முளைப்பாலிகைகள் ஆற்றில் விடப்படுகின்றன. நிலாப் பெண்ணுக்கு புத்தாடை கொடுத்துச் சிறப்புச் செய்கின்றனர். மேலும் குயவர், கொல்லர் போன்றோருக்கும் புத்தாடை கொடுத்து மரியாதை செய்கின்றனர். இவ்வாறு மரியாதை செய்வது பல்வேறு வகைகளில் இவர்கள் வேளாண்மைக்கு உதவுவதால் ஆகும். இவ்விழாவில் பாடப்படும் ஒரு கும்மிப் பாடல் வருமாறு.

"புள்ளாயா புள்ளாயா தேவேந்திரப் புள்ளாயா
புள்ளையார் பொண்டாட்டி எப்பேரு பட்டவ
மாடு நெறஞ்சவ வயிரமணி பூத்தவ
கழுத்து நெறஞ்சவ தொளசிமணி போட்டவ"

என்றும்

"ஒரு இன்னம் சந்தனமா ஒன்னரைஇன்னனி குங்குமமா
அழகான பிள்ளையாருக்கு அன்னி அன்னி வீசிடுவோம்"

தேவேந்திரப் பிள்ளையாரையே நிலாப் பிள்ளை வழிபாட்டுப் பாடலிலும் பாடுகின்றனர். இப்பாடலின் கருத்தும் வழிபாட்டில் இடம்பெறும் சடங்குகளையும் நோக்க இவ்வழிபாடும் வேளாண் வளமையுடன் தொடர்புடைய சடங்காகவே காணப்படுகின்றது". மூத்த குடிமக்கள் ஞாயிறு போலத் திங்களுக்கும் ஆற்றல் இருப்பதாக நம்பினர். வேளாண்மைச் சமூகத்தில் திங்கள் வழிக் காலக்கணிப்பு நடைமுறைப்படுத்தப்பட்டது. வானத்தையும் நிலத்தையும் தம்பதிக் கடவுளராகக் கருதியது போலவே ஞாயிற்றையும் திங்களையும் தம்பதிக் கடவுளராக ஏற்றனர். இதனால் நிலத்திற்குரிய பண்புகளைத் திங்களுக்கும் ஏற்றினார். தொன்மக் கதைகளில் ஞாயிறும் திங்களும் தம்பதியர்களாக இடம்பெறுகின்றனர்[33].

திங்களைப் பெண்ணாக உருவகிப்பவர்கள் பிறை வளர்வதையும் தேய்வதையும் கருவுறுவதலாகவும் கருவுயிர்த்தலாகவும் கொள்கின்றனர். மேலும் பிறப்பு, பருவமடைதல், இறத்தல் போன்றவையாகவும் பிறையின் வளர்ச்சியைக் கருதுகின்றனர் [34].

சந்திரனுடைய திதிகள், கிரகணங்கள், விஷிக்கள், அயனங்கள் போன்றவை பருவகால மாறுதல்களுடன் சேர்ந்தவை. அந்தக் காலங்களில் இனத்தவர் அனைவரையும் ஒருங்குகூடச் செய்யும் ஆவணி அவிட்டம், தைப்பூசம் போன்ற விழாக்கள் நடைபெறுகின்றன. தைப்பூச நாள் பெரும்பாலும் நிறைமதி நாளாக இருக்கும். அந்நாளில் புண்ணிய நதியில் நீராடினால் மிகுந்த புண்ணியம் உண்டாகும் என்று நம்புகின்றனர். தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடைமருதூரில் தைப்பூச விழா மிகச் சிறப்பாக நடைபெறும். மேலும். இந்நாளை 'தைப்பொங்கல்' என்று கூறி உழவர்கள் கொண்டாடி வருவதைக் காணலாம்[34]. இவ்வகையில் 'நிலா' பல்வேறு வகைகளில் வேளாண் வளமையுடனும் மனித வளனுடனும் தொடர்புபடுத்தப் படுவதைக் காண்கின்றோம். இந்நிலா வழிபாட்டில் இடம்பெறும் நிலாப்பெண்ணை"

மணமுடித்துக் கொடுப்பது மாதிரியான சடங்கு நிலத்தின் வளத்தை பெண்ணின் வளத்தோடு தொடர்பு படுத்திக் காண்பதாக அமைகின்றது. மேலும் தேவேந்திரப் பிள்ளையாருக்கு தேவேந்திர நிலாப் பெண்ணை (வயலை) மணமுடித்துக் கொடுப்பதாகவும் அமைகின்றது. இங்கு பெண் அதாவது நிலாப்பெண்ணை வயல் தேவேந்திர என்பதாகவும் மழை என்பதாகவும் பொருள் கொண்டு மழையின் அதிபதியாகிய வேந்தனுக்கு வயல் எனும் பெண்ணை மணமுடிப்பதாகவும் கருதலாம். மேலும் பாண்டிய குல மன்னர்களின் குல முதலாக அதாவது குறியீடாகக் கருதப்படுகின்ற 'சந்திரவம்ச' வழிபாட்டின் எச்சமாகவும் இதனைக் கருதலாம்.

இந்த நிலாப் பிள்ளை வழிபாட்டிலும், தேவேந்திர பிள்ளையார் வழிபாட்டிலும், மல்லாண்டை வழிபாட்டிலும் பெரிதும் பெண்களே கலந்து கொண்டு சடங்குகள் நிகழ்த்துகின்றனர். இவ்வாறு பெண்கள் வேளாண்மையோடு அதிகம் தொடர்புபடுத்துவதற்கான காரணங்களை நா. வானமாமலை வருமாறு விளக்குவார். "புராதன விவசாயக் காலத்தில் அவர்கள் புற உலக வாழ்க்கைக்குப் பூமியே முக்கியமானவை. செழிப்புத் தெய்வங்களும் மந்திரச் சடங்குகளும் பூமியின் செழிப்புத்திறனை மிகுதியாகக் கற்பனை செய்யப்பட்டு உருவாக்கப்பட்டன. செழிப்புத்திறன் பெண்களுக்கே உண்டு என்ற நம்பிக்கை தோன்றியது. பெண்கள் தாம் முதலில் வேட்டைத் தொழிலில் இருந்து பூமியில் விதையைச் செடியாக வளர்க்கும் திறனுக்கும் குழந்தை பெறும் தகுதிக்கும் தொடர்பு உண்டு என்று புராதன விவசாயத்தில் ஈடுபட்ட மக்கள் நம்பினர். எனவே விவசாய மந்திரச் சடங்குகளில் பெண்களே பங்கு கொண்டனர்"[25]. என்று கூறுவதற்கேற்ப மருதநில உழத்தியர்கள் பண்டைக்காலம் தொட்டு பல்வேறு வகையான வேளாண் சடங்குகளையும் மந்திரச் சடங்குகளையும் விடாது செய்வது பின் வேளாண் தொடர்பான பல்வேறு உழத்திப் பாடல்களையும் பாடி வேளாண் வளமைக்கு இன்றும் வளம் சேர்த்து வருவதைக் காணமுடிகின்றது.

**வழிபாட்டுச் சடங்குகளில்**
**நெல் சார்ந்த கலைப் பொருட்கள்**

நெல் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட இம்மக்கள் நெல் அறுவடைக்கு முன்பு 'நாட்கதிரறுத்தல்' எனும்

பெயரில் நல்ல கதிர்களை அறுத்து இறைவனுக்குப் படைத்து வழிபாடு செய்கின்றனர். இச்சடங்கை பள்ளு நூல்களும் குறிப்பிடுகின்றன. நாட்கதிர் என்றால் நல்ல நாளிலே முதன்முதலில் அறுத்த புதிய கதிர் என்பதாகும். இதனை வையாபுரிப்பள்ளு

"நெல் விளைந்தவுடன் பள்ளரெல்லாம்
முழங்கிக் களிப்பேறி
வளைந்து மல்லாண்டப்ப - னுக்கு
இளந்தை யாடு வெட்டி
பொங்கலிட்டு நாட்கதிருங் கொய்துமே
அலகு கதிர்க் கோட்டை வைத்து"

என்று குறிப்பிடும். இங்கு குறிக்கப்படும் அலகு கதிர் என்பது நெற்கதிர் என்பதாகும். கோட்டை என்பது நாட்கதிராகக் கொய்யப்பட்ட அலகுக் கதிர்களை இறைவனுக்குக் காணிக்கையாக்குதல் ஆகும். இவ்வழக்கம் அழகர் கோயில், பழனி முருகன் கோயில், வீரபாண்டி மாரியம்மன் கோயில் என்றவாறு பல இடங்களில் வேளாண் தானியங்களை இறைவனுக்குக் காணிக்கையாக்குவதைப் பார்க்க முடியும்.

இவ்வாறு பள்ளு நூல்களில் குறிக்கப்படும் நாட்கதிர் கொய்து இறைவனுக்குப் படைக்கும் வழிபாடு இன்றும் இம்மக்களிடையே வழக்கிலிருக்கின்றது. இறைவனுக்குப் படைக்கும் நாட்கதிர்களை பலவகையான கலைப் பொருட்களாகச் செய்து படைக்கின்ற வழக்கம் இருக்கின்றது. இக்கலைப் பொருட்கள் குறித்து வருமாறு காண்போம்.

### அலகு கதிர்

வயலில் நெல் விளைந்தவுடன் அறுவடைக்கு முன்பு கொத்துக்காரர் ஒரு நல்ல நாளில் வயலில் நாட்கதிர் கொய்து அதனைப் பல கலை வடிவங்களில் செய்து கோயில்களில் காணிக்கையாக்குவதை அலகு கதிர் என்கின்றனர். இதனையே கண்ணாடிக் கதிர், கோமாளிக் கதிரென்ற பெயரிலும் அழைக்கின்றனர். இதனைக் கோயில்களில் கட்டி விடுவதை ஒரு விழாவாகவும் பழனி வட்டாரங்களில் நடத்துகின்றனர். அலகு கதிரைப் பெரும்பாலும் கொத்துக்காரர்களே செய்கின்றார்கள். கொத்துக்காரர் என்றால் நெல் வேளாண்மைக்குரிய ஆட்களைத்

திரட்டி வயல்களில் வேலை வாங்குபவர் என்று பெயர். ஒவ்வொரு வயல் அறுவடையின் போதும் இறைவனுக்கென்று ஒரு அலகு கதிர் கட்டப்படும். இதனைக் கட்டுவதற்கான கூலியை வயல் உரிமையாளரிடமிருந்தே கொத்துக்காரர் பெறுகின்றார். குறைந்த அளவு 4 வல்லம் நெல் கூலியாகக் கிடைக்குமென்கின்றனர். பணமும் பெறுவதுண்டு. அலகு கதிர் செய்தல் என்பது நெல் மணிகளுடன் இருக்கும் கதிரின் தாளினை சடைப் பின்னுவது போன்றோ கயிறு திரிப்பது போன்றோ திரித்து மணி மகுடம் போன்றோ, பெண்கள் அணியும் காதணி போன்றோ தேர் போன்றோ வேல் போன்றோ கட்டி விடுவது ஆகும்.

அலகு கதிர்களைக் கோவில்களில் கட்டிவிடுவது மட்டுமல்லாமல் இம்மக்கள் தங்களின் வீடுகளிலும் தங்களின் பண்பாட்டுக் குறியீடாகக் கட்டித் தொங்கவிட்டுள்ளனர். பேரூர் பட்டீஸ்வரர் கோயிலில் ஈஸ்வரனுக்கு நெற்கதிரால் ஆன கிரீடம் நெல் அறுவடைக் காலங்களில் இம்மக்களால் செய்து காணிக்கையாக்கப்படுகின்றது. இக்கிரீடத்தைக் காண்கையில் மருதநிலத் தலைவன் தனது நிலத்தில் விளைந்த நெல்லை வேளாண்கள வெற்றியாகக் கருதி தனது தலையில் சூடிய நெற்கதிரால் ஆன மகுடமே பின்பு நிலங்களைப் போரில் வெற்றி பெறுகையில் சூடும் மணிமகுடமாக மாறியதோ என்று கருதத் தோன்றுகிறது.

இவ்வாறு மகுட வடிவில் செய்யப்படும் அலகு கதிரில் ஒரு மூட்டை நெல் வரும் அளவில் கூட கதிர்களைக் கட்டுகின்றனர். இதல்லாமல் வட்டவடிவிலும் நீளவடிவிலும் பல அலகு கதிர்கள் செய்யப்படுகின்றன. அறுவடை முடிந்த பின்னர் பல்வேறு வயல்களிலிருந்து செய்யப்பட்ட அலகு கதிர்களை ஒரு மூங்கிலில் தோரணமாகக் கட்டி மேள, தாளத்துடன் எடுத்து வந்து கோயில்களில் வைக்கின்றனர். நாட்கதிரிலிருந்து எடுக்கப்பட்ட அரிசியிலிருந்து பொங்கல் வைத்து ஆடு வெட்டி வழிபாடு செய்கின்றனர். இவ்வழக்கம் பழனி மற்றும் பொள்ளாச்சிப் பகுதிகளில் இன்னும் கடைப்பிடிக்கப்படுகின்றது. இதல்லாமல் பழனி கோயில்களில் நெல்லையே காணிக்கையாக்குவதையும் காணமுடியும்.

மேற்கண்டவாறு விதவிதமான கலை வடிவங்களில் செய்யப்பட்டுள்ள அலகு கதிர்களின் கலை நுட்பங்கள் காண்போரை வியக்க வைக்கும் ஆற்றலுடையது. பல அலகு கதிர்கள் பெண்கள் அணியும் நெற்றியணி, காதணி, வோலாக்கு, கழுத்தில் அணியும் முத்துமாலைகள் போன்று காணப்படுகின்றன. சீவக சிந்தாமணி கேமசரியார் கலம்பகத்தில் மருத நில வருணனையாக தாமரை மலர் மீது செந்நெல்கதிர் முற்றி கிடந்தது அரங்கிலே ஆடும் ஆடல் மகளிரின் நெற்றியில் சூட்டியுள்ள தலைக்கோலம் எனும் அணிகலன் போன்று இருந்தது என்று குறிக்கப்படுவதை நினைக்க இன்று பெண்கள் அணிந்துள்ள பல அணிகலன்களின் வடிவம் நெல்கதிர்களை ஒன்று சேர்ப்பதால் உண்டாகும் வடிவமுறை ஒத்திருக்கக் காணலாம். இப்பாடல் வருமாறு

கரும்பணி வள வயல் காமர் தாமரை
வரம்பு அணைந்து அதன் நுதல் கிடந்தவார்செந்நெல்
அரங்கு மணி நாடக மகளிர் ஆய்நுதல்
சுரும்பு சூழ இலம்பகத் தோற்றம் ஒத்தது

சீவக சிந்தாமணி - (பா.எண் : 1448)

அலகு கதிரை ஊரின் முற்றத்திலுள்ள மரங்களில் வரிசையாகக் கட்டித் தொங்க விட்டிருப்பதையும் காணமுடியும். இவ்வாறு செய்வதால் ஊர் மந்தையில் கூடி இருப்போர் கண்டு களிப்பதற்கும் குருவிகள் புறாக்கள் போன்ற பறவைகள் இரை உண்ணவும் அலகுகதிர் பயன்படுவதாகச் சொல்கின்றனர்.

மதுரை மாவட்டத்தில் பச்சைக் குச்சியில் குடை போன்று செய்து அதன் மீது நெற்கதிர்களைச் சுற்றி முத்துக்குடை எனும் பெயரில் கோயில்களுக்குக் காணிக்கையாக்குகின்றனர். விழாக்காலங்களில் இந்நெல்லை பொங்கல் வைப்பதற்கும் மாவிளக்கு எடுப்பதற்கும் பயன்படுத்துகின்றனர். நெல் ராஜ வெள்ளாமை என்பதாலும் தானியங்களுக்கெல்லாம் ராஜா நெல் என்பதாலும் கோயில்களில் நெல்லைக் காணிக்கையாக்குதல் சிறப்பானதாகக் கருதப்படுகின்றது. மேலும் இந்த முத்துக்குடை எனும் கலைப்பொருளை முத்துத் தோரணம் எனும் வகையில் கோயில் விழாவின் போது தெருக்களில் கட்டுவதும் உண்டு.

தெருக்களில் நெல் உதிர்ந்து சிப்பரந்து இடப்பது போன்று நெல் வேளாண்மையும் மிகுதியாகும் என்பது நம்பிக்கை. மதுரை மாவட்டங்களில் இவ்வழகு கதிர்களைக் கட்டுபவர் மடையன் ஆவார். இவர் நெல் வேளாண்மைக்கு தண்ணீர் பாய்ச்சும் பணியினைச் செய்பவர் ஆவார்.

### நெற்கரகம்

பழனிப் பகுதியில் வாழும் இம்மக்கள் பழனி முருகனுக்கு நெற்கரகம் எடுத்து வழிபடுகின்றனர். நீர் நிரம்பிய குடத்தின் மேல் நெற்கதிர்களை அழகாகச் சுற்றி வைத்து அதன் மேல் வண்ண நூலால் கட்டுகின்றனர். இவ்வாறு தயார் செய்யப்படும் நெற்கரகத்தைச் சுற்றி ஊர் மக்கள் நெற்களைக் காணிக்கையாக்கு கின்றனர். இதன் பின்னர் நெற்கரகமும் நெல்லும் மேளதாளங் களுடன் ஊர்வலமாக எடுத்து வரப்பட்டு முருகன் கோயிலில் காணிக்கையாக்கப்படுகின்றது.

### முத்து ஆரத்தி

புதிய திருமணத் தம்பதியரை ஆரத்தி எடுத்து வரவேற்பது தமிழர் வழக்கம். அவ்வகையில் இம்மக்களிடம் உள்ள ஓர் ஆரத்தி வகை முத்து ஆரத்தி ஆகும். இது பித்தளைக் குடத்தின் மீது மாவிளக்கைத் தடவி அதன் மீது நெல்லையும் குண்டு மணியையும் வரிசையாக பதித்து வைப்பது ஆகும். இவ்வாறு தயார் செய்யப்படும் ஆரத்தி முத்து ஆரத்தி எனப்படும். இந்த ஆரத்தி எடுக்கும் பெண்ணுக்கு மணமகன் குறைந்தது ரூ 10- ஆவது கொடுத்தாக வேண்டுமாம். இந்த வகை ஆரத்தி இம்மக்களின் வேளாண் பண்பாட்டைக் குறியீடாக்கிக் காட்டுவதால் இதனை எடுப்பதும் இதனை எதிர் கொள்வதும் சிறந்ததாகக் கருதப்படுகின்றது.

### அலகு கதிர் காணிக்கை நோக்கம்

கோயில்களில் 'அழகு கதிர்' செய்து காணிக்கையாக்குவதால் அடுத்த ஆண்டும் இதே போன்று வேளாண்மை சிறக்குமென்று நம்புகின்றார்கள். மேலும் வேளாண் விளைச்சல் இறைவனின் அருளால் உண்டாவது என்று நம்புவதால் இறைவனுக்கு வேளாண்மையின் முதற்தானியத்தைக் காணிக்கையாக்கு கின்றனர். இறைவனுக்கு அலகு கதிர் காணிக்கை செய்யாவிடில்

விளைச்சல் பெறுகாது என்றும் நம்புகின்றனர். இந்நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படும் இவ்வழகு கதிர் வழிபாடு நெல் வேளாண் சமூகப் பண்பாட்டுடன் தொடர்புடைய வழிபாட்டுச் சடங்காக அமைவதும் இங்கு கருதத்தக்கது.

### மல்லாண்டை வழிபாடு

நெல் அறுவடைக்கு முன்பு வயல்களில் உள்ள மல்லாண்டைக்குப் பொங்கல் வைத்து கிடாய் வெட்டி வழிபாடு செய்வது மள்ளரின மக்களின் வேளாண்மை மரபாகும். இத்தெய்வம் ஒரு குழவிக்கல்லின் வடிவில் அல்லது உருண்டையான கல்லின் வடிவில் வயல்களில் வைத்து வழிபடப்படும். இவ்வழிபாடு குறித்துப் பள்ளு நூல்களும் குறிப்பிடுகின்றன.

"நெல் விளைந்தவுடனே பள்ளரெல்லாம்
மால்தெற்சிதங்க ளென்ன முழங்கிப் பொங்கல்
மல்லாண்டப்பருக்கு விளங்கி
நாட்கள் கேட்டுக் கதிர் கொய்தான்"

என்று வரும் கட்டி மகிபன் பள்ளு வரிகளும்

'மல்லாண்டப்பனுக்கு கிளந்தையாடு வெட்டி என்று வரும் வையாபுரிப் பள்ளுப்பாடலின் வரிகளும் இம்மக்களிடம் மட்டுமே இவ்வழிபாடு இருப்பதைக் காட்டும். கரூர், திருச்சி மாவட்டங்களில் மல்லாண்டப்பன் கோயில்கள் நிறையக் காணப்படுகின்றன. ஈரோடு, கோவை மாவட்டங்களில் வயல்களில் உறையும் வளமைத் தெய்வமாக மல்லாண்டை கருதப்படுகின்றது. இம்மல்லாண்டை எனும் வேளாண் வளவழிபாடு நெல் வேளாண்மை செய்யும் தேவேந்திரர்களுக்கு மட்டுமே உரியதாக இருப்பதை கோவை மாவட்ட அரசு அருங்காட்சியகக் காப்பாளர் டாக்டர் மகேசுவரன் தம் ஆய்வில் திறுவியுள்ளார்.[36] இன்றும் நெல் அடிக்கும் களங்களில் வழிபடும் தெய்வமாக ஒரு கல்லை கொங்கு நாட்டில் காணலாம். இத்தெய்வத்திற்கு மல்லாண்டை சாமி என்று பெயர். மன்னர் + ஆண்டவர் + சாமி என இச்சொல்லைப் பிரிக்கலாம். மன்னர் குலத்தாரின் தெய்வம் இது என்பது மிகத் தெளிவாகும் என்று குறிப்பிடுவார் டாக்டர் சிற்பி பாலசுப்பிரமணியம்.

மல்லாண்டை என்பது வளமையின் தெய்வமாக உருவம் ஏதும் இன்றி வயலில் கிடக்கும் ஏதோ ஒரு கல்லை எடுத்து வழிபடுவதை இவ்வழிபாடு குறிக்கிறது. இதனால் இது வயல்களைக் காக்கின்ற தேவேந்திரனையே வளமைத் தெய்வமாகக் கருதி இம்மக்கள் வழிபடுகின்றனர் எனலாம். ஏனெனில் வேளாண் தொடக்கத்திலும், முடிவிலும் இதற்கே இம்மக்கள் வழிபாடு செய்கின்றனர். இவ்வழிபாட்டையே தேவேந்திரப் பிள்ளையார் வழிபாட்டிலும் காணலாம்.

**தொகுப்புரை**

1. கொங்கு நாட்டில் வாழும் தேவேந்திர குல வேளாளர்களிடம் காணப்படும் வேளாண் வள வழிபாடாக அமையும் நாற்று நடவுத்திருவிழா, மல்லாண்டை வழிபாடு, தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு, நிலாப்பிள்ளை வழிபாடு, அலகுக்கதிர் வழிபாடு ஆகியன இம்மக்களின் வேளாண் பண்பாட்டைப் பிரதிபலிப்பதாக அமைகின்றன.

2. இந்திர விழா எனும் நாற்று நடவுச் சடங்கு இந்திர விழாவாகவும் சிவன் மள்ளனாகத் தோன்றியதைக் கொண்டாடும் உழவர் விழாவாகவும் அமைந்து சிறப்புப் பெறுகின்றது.

3. நாற்று நடவுத் திருவிழா இவர்களிடம் மட்டுமே நிலை பெறடையக் காரணம் இவர்களிடம் பண்டையக் காலம் தொட்டுத் தொடர்ந்து வரும் வேளாண் மரபெனும் மன்னர் மரபே ஆகும்.

4. இந்திரவிழா எனும் நாற்று நடவு விழா மழை வளத்தையும் பயிர் வளத்தையும் இணைத்து வேண்டும் உலகப் பொதுநோக்குடைய வளமை வழிபாடாகவும் இவ்விழா அமைகின்றது.

5. தேவேந்திரர் பிள்ளையார் வழிபாடு இந்திரனின் வாகனமாகிய ஐராவதம் எனும் யானையுடன் இணைத்து வழிபடும் மழை வேண்டும் வளவழிபாடாகவே அமைகின்றது.

6. திலாப் பிள்ளை வழிபாடு வேளாண்மையின் இறுதியில் நடத்தப்பெறுவதால் இது வேளாண்மையைச் செழிக்க செய்த திலவெனும் கடவுளுக்கு நன்றி செலுத்தும் வழிபாடாக அமைகின்றது. மேலும் இவ்வழிபாட்டில் திலாப் பெண்ணுக்கு மணமுடித்தல் எனும் சடங்கு நடைபெறுவது அதிலும் தேவேந்திரப் பிள்ளையாருக்கு மணமுடித்து வைப்பது என்பது மறை அதிபதிகளாகிய வேந்தனுக்கு வயல் (திலா) எனும் பெண்ணை மணமுடித்துக் கொடுப்பதாக அமைகின்றது.

7. கடவுளர்களுக்கு நெல்லை அலகுக்கதிர்களாகச் செய்து காணிக்கையாக்குவதால் அடுத்த ஆண்டும் இதே நல்விளைச்சல் கிடைக்குமென்று இம்மக்கள் நம்புகின்றனர்.

8. 'மல்லாண்டை' எனும் வள வழிபாடு இம்மக்களிடம் மட்டுமே காணப்படுவது இம்மக்களின் வேளாண் பண்பாட்டின் சிறப்பம்சமாகும்.

## குறிப்புகள்

1. கோவைகிழார், திருப்பேரூர்புராணம், ப. 749
2. புலவர் குப்புராசு, புலியகுளம், கோவை.
3. குருசாமி சித்தர், தமிழ் இலக்கியத்தில் தேவேந்திர குல வேளாளர், பக். 74-75.
4. குருசாமி சித்தர், தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 278.
5. செங்கோட்டுப் பள்ளு, பாடல் 5
6. தேவ ஆசிர்வாதம், மூவேந்தர் யார்? ப. 117
7. அனுமந்தர், கே. ஆர்., தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையபட்டு முறை, பாட்டாளி முழக்கம், ஜூன், 1993.
8. தினமணிக்கதிர், 28-9-97, இன்றும் நடக்கிறது இந்திரவிழா, ப. - 17.
9. மறை மலையடிகள், வேளாளர் நாகரிகம், ப. 58

10. பக்தவச்சல பாரதி, நாட்டுப்புறவியலும் கோட்பாடுகளும் (பதில்) சிலம்பு நா. செல்வராசு, ப. 76.
11. சுப்பிரமணியன், பே., திருவிழாக்களில் இடம்பெறும் நாட்டுப்புறச் சைகை ஆட்டங்கள் (கட்டுரை) ப. 13.
12. ரெங்கசுவாமி, வயது (30), புலியகுளம், கோவை
13. மேலது
14. மேலது
15. மேலது
16. இந்திரவிழா (கட்டுரை) வாழ்வியல் களஞ்சியம், தொகுதி - 3, ப. 60
17. மேலது
18. மேலது ப. 662
19. மேலது ப. 661
20. அருச்சுனன், ஓ.கே., பெரியார் மாவட்டத்தில் பண்ணைப் பாடல்கள், வெளியிடப்படாத பிஎச்.டி. பட்ட ஆய்வேடு, பின்னிணைப்பு பாடல் எண் 198
21. மேலது, ப. எண். 201
22. ஐயனார். வீ., பள்ளர் குலச் சடங்குகள், வெளியிடப்படாத எம்.ஃபில் பட்ட ஆய்வேடு, ப - 142
23. தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், ப. 27.
24. ஞானசேகரன், தே., நாட்டார் சமயம் தோற்றமும் வளர்ச்சியும், பக். 29-32
25. மேலது
26. மேலது
27. மகேசுவரன், சி., கொங்குநாட்டில் மல்லாண்டை ஓர் அறிமுகம் (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ) தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 95
28. சிற்பி பாலசுப்பிரமணியம், தேவேந்திர குல வேளாளர் ஆய்வுக்கான சில குறிப்புகள் (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ), மு.கா.ப., ப. 64.

## முடிவுரை

தமிழ்நாட்டில் கொங்கு நாடு பழங்காலம் முதல் இன்று வரை பல்வேறு வகைகளில் தனித்தன்மையுடன் விளங்கிவரும் நாடாகும். இக்கொங்கு நாட்டில் வழக்கிலுள்ள நாட்டுப்புறச்சமயம் புராதனச் சமயத்தின் (Folk Religion) பல்வேறு கூறுகளை (Primitive Religion) உள்ளடக்கிக் காணப்படுகின்றது என்பதை இவ்ஆய்வு கண்டறிந்து சொல்லியுள்ளது.

- பழங்கால மக்களிடம் வழக்கிலிருந்த மந்திரம் (Magic) இயற்கை வழிபாடு (Nature Worship) குலக்குறிவழிபாடு (Totemism) புனிதப்பொருள் வழிபாடு (Fetishism) விலக்கு (Taboo) ஆவி வழிபாடு (Animism). உயிர்ப்பொருள் வழிபாடு (Animatism) முன்னோர் வழிபாடு (Ancestoral worship) பலதெய்வ வழிபாடு (Polytheism) என்றவாறான பல்வேறு புராதனச் சமயத்தின் கொள்கைகளை இன்றைய நாட்டுப்புறச் சமயம் கொண்டு விளங்குகின்றது.
- கொங்குநாட்டு நாட்டுப்புறத் தெய்வங்களில் ஆவிவழிபாடும், முன்னோர் வழிபாடும் பெரிதும் காணப்படுகின்றன. நாட்டுப்புற மக்கள் பல தெய்வங்களையும் தங்களின் நலனுக்காக வழிபடுபவர்களாகவே காணப்படுகின்றனர்.
- இயற்கைக்கு அப்பாற்பட்ட ஓர் ஆற்றலிடம் மனிதன் கொள்ளும் அச்சமும் அன்பும் வழிபாட்டின் தோற்றமாக அமைகின்றது. இவ்ஆற்றலிடம் வழிபாட்டின் மூலமும் வேண்டுதல்கள் மூலமும் படையல்கள் மூலமும் பல்வேறு வகைகளில் தொடர்பு கொள்ள முயல்வதைச் சமயம் (Religion) என்று வரையறை செய்யலாம்.
- ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்குள் நுழைவதற்கு முன்புவரை இந்து மதம், இந்து சமயம் என்ற சொல்லாக்கங்கள் வழக்கிலில்லை. பலதெய்வ

வழிபாட்டினையுடைய இந்திய மக்களை தங்கள் ஆட்சி நிர்வாக வசதிக்காக இந்து என்று அழைத்தனர். ஆனால் மக்கள் தங்களின் வாழிடம், சாதி, தொழில் சார்ந்து பல வகையான கடவுளர்களை வழிபடுபவர்களாகக் காணப்பட்டனர். இதே நிலைதான் இன்றும் நிலவுகிறது. இவ்வாறான பல்வேறு கடவுளர்கள் அடங்கிய சமயத்தையே மக்கள் சமயம் (Popular Religion), நாட்டுப்புறச் சமயம் (Folk Religion), என்று அறிஞர்கள் அழைக்கின்றனர்.

❖ இவ்வாறு நாட்டுப்புற மக்களால் பெரிதும் வழிபடப்படும் கடவுளர்களைச் சிறுதெய்வம் என்று அழைப்பது பொருத்தமாக இல்லை. இத்தெய்வங்களை நாட்டுப்புறத் தெய்வங்கள் (Folk Gods) இவ்வழிபாட்டை நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு (Folk Worship) என்றும் அழைப்பதே சரியானதாகும் என்பதை இவ்வாய்வு திறனாய்ந்து சொல்லியுள்ளது.

❖ கொங்கு நாட்டில் வழிபடப்படும் நாட்டுப்புறத் தெய்வங்களை அது வழிபடப்படும் நோக்கில் குடும்ப தெய்வம், குல தெய்வம், ஊர்ப் பொதுத் தெய்வம், காவல் தெய்வம் என்றவாறு நான்கு வகைகளில் காண முடிகின்றன. குடும்ப தெய்வ வழிபாட்டிலும் குல தெய்வ வழிபாட்டிலும் முன்னோர் வழிபாடும், இறந்து பட்ட கன்னிப் பெண்களின் வழிபாடுமே பெரிதும் காணப்படுகின்றன.

❖ குடும்ப தெய்வம் வளர்ச்சி பெற்றுக் குலதெய்வமாகவும் குல தெய்வம் வளர்ச்சி பெற்று ஊர்ப் பொது தெய்வமாகவும் மாறுவதை இவ்வாய்வு கண்டறிந்து சொல்லியுள்ளது.

❖ ஊர்ப் பொதுத் தெய்வ வழிபாட்டில் பல்வேறு சமூகத்தினர் சமூக நல்லிணக்கத்துடன் கலந்து கொண்டு வழிபாட்டில் பங்கேற்பதனை இவ்வாய்வு விளக்கியுள்ளது.

- ஒரு குலதெய்வத்தை வழிபடுபவர்கள் ஒரு மூதாதையரின் வழித் தோன்றல்கள் என்ற கருத்து நாட்டுப்புற வழிபாட்டில் வலியுறுத்தப்படுகின்றது. ஆனால் ஒரு குல தெய்வத்தைப் பல சமூகத்தவர்கள் வழிபடும் மரபும் காணப்படுகின்றது. இதிலிருந்து தமிழ்ச் சமூகத்தினர் அனைவரும் ஒரு காலத்தில் ஒரே குல தெய்வ வழிபாட்டினராய் இருந்து பின்பு பல குல தெய்வ வழிபாட்டினராய் மாறினர் என்றும் கருத இடமிருக்கின்றது.

- ஊர்ப் பொதுத் தெய்வங்களாக அம்மன் தெய்வங்களே பெரிதும் காணப்படுகின்றன. இதல்லாமல் ஊரைக் காக்கவும், ஏரி, குளங்கள், வயல்களைக் காக்கவும் முனியப்பன், கன்னிமார், நாட்ராயன் போன்ற காவல் தெய்வங்களையும் பெரிய அளவில் மக்கள் வழிபடுகின்றனர்.

- குல தெய்வ வழிபாட்டில் பலியிடுதல் தவறாது இடம்பெறுகின்றது. இப்பலியிடுதலில் கிடாயை ஒரே வெட்டாக வெட்டுதல், இரத்தத்தை உறிஞ்சிக் குடித்தல், சூலாடு பலியிடுதல் போன்ற பல்வேறு முறைகள் காணப்படுகின்றன. பலியிடுதலால் தெய்வங்களும் தீய ஆவிகளும் திருப்திப் படுத்தப்படுவதாகக் கருதப்படுகிறது.

- பன்றி குத்துதல் எனும் பலியிடும் சடங்கு கொங்குநாட்டில் மட்டுமே காணப்படும் தனித்த சடங்காகும்.

- மயானப்பூசை, பலிச்சோறு எறிதல், ஆகாய பூசை போன்றன அனைத்தும் பழஞ்சமயக் கூறுகளை உள்ளடக்கிய வழிபாட்டு முறைகளாகும்.

- சாமியாடுதல் எனும் மரபு நாட்டுப்புறச் சமயத்திற்கேயுரிய தனித்த மரபாகும். தெய்வம் மனிதனுள் இறங்கிப் பேசி ஆடி அமைதியுறும் என்ற நம்பிக்கையில் இச்சடங்கு எல்லா நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டிலும் காணப்படுகின்றன.

- குல விருந்துச் சடங்கு எனும் குல தெய்வ வழிபாட்டுச் சடங்கு இனக்குழுக் காலத்திய மக்கள் கூட்டாக உணவு உண்டு வாழ்ந்ததை நினைவூட்டுவதாக அமைகின்றது.

- அம்மன் கோயில்களில் இடம்பெறும் மாவிளக்கு எடுத்தல் சடங்கு நெல்லை விளைவித்த கடவுளுக்கு நெல்லரிசிமாவால் படையல் செய்து நன்றி செலுத்துவதிலிருந்து தோன்றியிருக்கலாம் என்பதை இவ்வாய்வு கண்டறிந்துள்ளது.

- நீர் நிறைந்த கரகம் அம்மனாகக் கருதப்படுவதும், நீர் நிலையிலேயே உருவாக்கப்பட்டு அதே நீர்நிலையில் விடப்படுவதும் போன்ற வழிபாட்டு மரபுகளிலிருந்து மழையையே அதாவது நீரையே மக்கள் மாரி (மழை) அம்மனாகக் கருதி வழிபடுகின்றார்கள் என்றும் கருதலாம்.

- முளைப்பாலிகை எடுத்தல் சடங்கு ஒரு வேளாண் வளச்சடங்காக இருந்து சமயம் தோன்றிய பின்னர் சமய வழிபாட்டுடன் இணைக்கப்பட்டிருப்பதனையும் காணமுடிகிறது. முளைப் பாலிகை நடனம் அதாவது கும்மிக் கொட்டுதல் ஒருவகையில் பயிர் நன்றாக வளர வேண்டுமென்பதையும், மழை வேண்டுமென்பதையும் பாவனையாக நடித்துக் காட்டும் பாவனைச் சடங்காக அமைகின்றது என்றும் சொல்லாம்.

- பூக்குழி இறங்குதல் எனும் தீ மிதி வழிபாடு தீமைகளிலிருந்து மனிதனைத் தூய்மைப் படுத்தும் எனும் நம்பிக்கையில் நடைபெறுகின்றது. கொங்கு நாட்டில் இவ்வழிபாடு பெரிதும் காணப்படுகின்றது.

- கொங்கு நாட்டில் நெல் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களிடம் காணப்படும் வேளாண் வள வழிபாடு இம்மக்களின் வேளாண் பண்பாட்டினைப் பிரதிபலிப்பதாக அமைகின்றது.

- இந்திர விழா எனும் நாற்று நடவுத் திருவிழா பண்டைக்காலம் தொட்டு இன்றுவரை இம்மக்களால் மழைவேண்டியும் வேளாண் வளம் வேண்டியும் நடத்தப்படுவதை இவ்வாய்வு கண்டறிந்து பதிவு செய்துள்ளது.

- சிவனே மன்னனாக மாறி வயலில் உழவு செய்த புராணக் கதையுடன் இந்திர விழா இணைக்கப்பட்டு நாற்று நடவுவிழாவாக நடைபெற்று வருவதைக் காணமுடிகின்றது. இவ்விழா மழை வளத்தையும் பயிர் வளத்தையும் இணைக்கும் உலகப் பொது நோக்குடைய வளவழிபாடாகவும் அமைகின்றது.

- இம்மக்களிடம் காணப்படும் மல்லாண்டை வழிபாடு, தேவேந்திரப் பிள்ளையார் வழிபாடு, நிலாப்பிள்ளை வழிபாடு, அலகு கதிர் வழிபாடு போன்றன நெல் வேளாண்மையுடன் தொடர்புடைய பண்டைய மருத நில வேந்தனின் வழிபாட்டின் எச்சமாக அமைகின்றது என்றால் மிகையாகாது.

## தகவலாளர் பட்டியல்

1. கருப்பையா (40) தேவேந்திர குல வேளாளர், கணபதி பாளையம், கோபி வட்டாரம்
2. கருப்பையா (50) தேவேந்திர குல வேளாளர், ஆயக்குடி, பழனி வட்டம்
3. புலவர் குப்புராசு (65) தேவேந்திர குல வேளாளர், புலியகுளம், கோவை.
4. டாக்டர் குருசாமி சித்தர் (56), தேவேந்திர குல வேளாளர், 10/2, நால்வர் நகர், கோயமுத்தூர்.
5. கிருஷ்ண பட்டக்காரர் (55) தேவேந்திர குல வேளாளர், வெள்ளலூர், கோவை.
6. கோவிந்த சுவாமி (50) முதலியார், பனைமரத்துப்பட்டி, சேலம்
7. செங்காளியப்பன் (75) கவுண்டர், பனங்காட்டூர், ஈரோடு மாவட்டம்.
8. செல்வராசு (40) கவுண்டர், உரல்பட்டி, பழனி வட்டம்.
9. சுப்ரமணியன் (40) நிர்வாக அதிகாரி, அருள் மிகு கோட்டை மாரியம்மன், சேலம்
10. தண்டபாணி (50) தேவேந்திர குல வேளாளர், பழனி.
11. நடராச பட்டக்காரர் (70), தேவேந்திர குல வேளாளர், சொக்கன் புதூர்.
12. நடராஜ் செட்டியார் (50) தேவனூர் புதூர், உடுமலை வட்டம்.
13. பெருமாள் (60) தேவேந்திர குல வேளாளர், ஆயக்குடி, பழனி வட்டாரம்.
14. பெரியசாமி (45) கவுண்டர், பூசாரி, பிசுலு மாரியம்மன், சேலம்.
15. ரெங்கசாமி (80) தேவேந்திர குல வேளாளர், புலியகுளம், கோவை.
16. வீரம்மாள் (60) தேவேந்திரகுல வேளாளர், பாலசமுத்திரம், பழனி வட்டாரம்.
17. வீராச்சாமிபிள்ளை (55) கொழுமம், பழனி வட்டாரம்.

## தமிழ் நூல்கள்

இராமநாதன், ஆறு., நாட்டுப்புறவியல் ஆய்வு முறைகள், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1992.

இராமச்சந்திரன் செட்டியார், கோ.ம., கொங்கு நாட்டு வரலாறு, தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர், கோவை, 1987.

கிருட்டிணசாமி. க., கூட்டமும் திருமணமும் மக்கள் வெளியீடு, சென்னை. 1983.

குருசாமி சித்தர்., தமிழ் இலக்கியத்தில் பள்ளர் மள்ளர் தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) தேவேந்திரா மன்றம், 5/1, குருசாமி நகர், கோயமுத்தூர். 1993

கோவைக்கிழார் திருப்பேரூர்ப் புராணம் தேவஸ்தான வெளியீடு கோவை. 1987

சரசுவதி. வி, நாட்டுப்புறப் பாடல்கள் சமூக ஒப்பாய்வு, பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. 1982.

சுப்பையா, மு. சிவக்கனி, கொங்குநாட்டுக் கோயில்கள் பாரிநிலையம், சென்னை, 1974.

சீனிவாசன், இரா., சக்திவழிபாடு செயக்குமாரி ஸ்டோர்ஸ் நாகர்கோயில், 1975.

செல்வராசு, ந. சிலம்பு,(பதில்) நாட்டுப்புறவியலும் கோட்பாடுகளும் சபாநாயகம் அச்சகம், சிதம்பரம், 1991.

ஞானசேகரன், தே. நாட்டார் சமயம் தோற்றமும் வளர்ச்சியும் இயூரி பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1992.

தர்மராஜ், ஆ.கி. மனிதனும் சமயமும், சர்வோதய இலக்கிய பண்ணை மதுரை, 1970.

துளசி இராமசாமி, நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை. 1985.

துளசி இராமசாமி, மங்கல தேவி கண்ணகி கோட்டம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை, 1987.

துளசி இராமசாமி, மாசானியம்மன், விழிகள், சென்னை, 1998.

தேவ ஆசிர்வாதம், இரா. மூவேந்தர் யார்? இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர், 1981.

தேவநேயப் பாவாணர் தமிழர் மதம் நேசமணி பதிப்பகம், காட்பாடி, 1972.

பக்தவச்சலபாரதி. சீ. பண்பாட்டு மானிடவியல், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1990.

மறைமலைஅடிகள், வேளாளர் நாகரீகம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி, 1957.

முத்தையா, இ. நாட்டுப்புறச் சடங்குகளும் மனித உறவுகளும்,
அரசு பதிப்பகம், மதுரை, 1996.

லூர்து, தே. நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள்
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்
பாளையங்கோட்டை, 1997.

வானமாமலை, நா. பழங்கதைகளும் பழமொழிகளும்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1984.

## ஆங்கில நூல்கள்


| | |
|---|---|
| Henry White head | Village Gods of South India<br>S. Sethi Publications<br>New Delhi - 1921. |
| Herskovits. J.<br>Melville | Cultural Anthropology<br>Oxford SIBH Publishings & Co.<br>New Delhi - 1974. |
| Sir James George<br>Frazer, O.M. | The Golden Bough<br>Volume 2,<br>The Macmillan Press Ltd.<br>London, 1976 |
| Srinivasan, M.N. | Religion and Society<br>among Goorgs of South India.<br>Oxford University, 1952. |
| ________________ | The encyclopedia of Religion<br>Volume 9,<br>Macmillan Publicity Company,<br>New York, 1987. |
| ________________ | Cencus of India 1961,<br>Fairsand Festivals, Vol. IX |

## ஆய்வுக் கட்டுரைகள்


அனுமந்தன், கே.ஆர். தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப் பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டு முறை (ஆங்கிலக் கட்டுரை) தமிழில் பெ. தங்கராஜ், பாட்டாளி முழக்கம், ஜூன், 1993.

சிற்பி பாலசுப்பிரமணியம் தேவேந்திர குல வேளாளர் ஆய்வுக்கான சில குறிப்புகள் குருசாமி சித்தர் (பதில்) தமிழர் பண்பாட்டு வரலாறு, ப. 64.

சிவ சுப்பிரமணியன், ஆ. முளைப்பாரி - ஒரு புராதனச் சடங்கு, தமிழ்க்கலை - 1, 1984.

சிவ சுப்பிரமணியன், ஆ. தமிழக நாட்டார் சமய ஆய்வு நாவலின் ஆராய்ச்சி, அக்டோபர், 1989.

சுப்பிரமணியன், பெ. திருவிழாக்களில் இடம் பெறும் நாட்டுப்புறச் செய்கை ஆட்டங்கள், வெளியிடப்படாத ஆய்வுக் கட்டுரை.

பக்தவச்சலபாரதி. சி., நாட்டார் தெய்வங்களும் வழிபாட்டுக் குழுக்களும், தமிழக நாட்டுப்புறத் தெய்வங்கள் பற்றிய சிறப்பு மாநாடு, பளையங்கோட்டை பிப்ரவரி, 1997.

மகேசுவரன், சி., பாரியூர் சூரசித்தன் (மள்ளர்) சமாதிக் கோவில் வாயிலாக அறியலாகும் மள்ளர் இனக் குழு வரலாறு, மள்ளர் மலர், ஏப்ரல், 1999.

மகேசுவரன், சி., கொங்கு நாட்டில் மல்லாண்டை ஒரு அறிமுகம் தமிழர் பண்பாட்டு வரலாறு, டாக்டர் குருசாமிசித்தர் (பதில்) தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயமுத்தூர், 1996.

லூர்து, தே., நாட்டார் தெய்வம், வரையறைகளும் அடையாள மயக்கமும், தமிழக நாட்டுப்புற தெய்வங்கள் பற்றிய சிறப்பு மாநாடு, பாளையங்கோட்டை, 1999.

லூர்து, தே., இன்றும் நடக்கிறது இந்திரவிழா தினமணிக்கதிர், கோவை, 28-9-97.

இந்திர விழா வாழ்வியல் களஞ்சியம், தொகுதி - 3, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

# ஆய்வேடுகள்


## பிஎச்.டி

1. அருச்சனன், ஒ.கே. - பெரியார் மாவட்டத்தில் பள்ளைப் பாடல்கள், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1994.
2. செல்வராக. க - கொங்கு வேளாளர் குலதெய்வ வழிபாடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1992.
3. முத்துலட்சுமி .ச. - பழனி பழனியைச் சுற்றியுள்ள கிராம தேவதைகள் - ஓர் ஆய்வு, வெளியிடப்படாத பிஎச்.டி பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. 1986.

## எம்.ஃபில்

1. ஜுவனார், வீ. - பள்ளர் குலச் சடங்குகள், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1981.
2. இருஸ்டிபாபு, தே. - தேவேந்திர குல வேளாளர்களின் கோயில்களும் வழிபாட்டு மரபுகளும், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1998.
3. சீதாலட்சுமி, எம்.கே. - பளங்காட்டூர் அண்ணன்மார் வழிபாட்டு முறைகள், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1988.
4. நாகரத்தினம், வெ.க. - கோவை மாவட்ட அகமுடையார் குலமரபும் பண்பாடும், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1984.
5. நிலாவதி. பா. - கோவை நகரத்துக் கோயில்கள் ஓர் ஆய்வு, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1986.
6. மலர்விழி, கோ.தி. - அவிநாசிக் கோயில் சிற்பங்கள் ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை. 1984.
7. முத்துலட்சுமி. ச., - பழனி - பழனியைச் சுற்றியுள்ள கிராம தேவதைகள் - ஓர் ஆய்வு மதுரை காமராசார் பல்கலைக்கழகம், மதுரை, 1986.



இந்திரவிழா நாற்று நடவுக்காக தேவேந்திர குல வேளாளர் பட்டக்காரர்களையும், மக்களையும் பட்டீஸ்வரர் முன்வர யானை அழைத்து வருதல்



கோபி வட்டம், கணபதிபாளையம் தேவேந்திர குல வேளாளர்
வழிபடும் மாரியம்மன் அலங்காரத்திற்கு
முன்பு காட்சி தரும் காட்சி



வழிபாட்டில் சக்தி மாரியம்மனின் அலங்காரத்திற்கு
பின்பு காட்சி தரும் சக்தி மாரியம்மன்